KARTIKAI SPECIAL NUMBER.

"The Viveka Chintamani is a Moral Force." "It is a Spiritual Gem." Regd.—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys,

Vol. XX.] பரிதாபி ஹு DECEMBER, 1912. கார்த்திகைமீ [No 9.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ 4.
அறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

## DEVOTED TO THE DIFFUSION OF LIGHT AND KNOWLEDGE.

அறிவுடையா ரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.

ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,

Overland 8 Annas extra.] *Lalitâlaya, 19, Adam St. Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.

For the *LALITA PUBLISHING Co.*, Sole Agents and Managers.

Thin Paper Edition for the people.] Regd. as a 'Book' and Copyrighted. [Subscription Price: Yearly Rs. 4

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

### பழனிஸ்தலம்.

### பழனியாண்டவர் உத்ஸவங்கள்

I. தைமீ—தைப்பூசம் (பூசத்தில் ரதாரோஹணம், த்வஜாரோஹணமான 7-ம் நாள்) பின்னும் மூன்றுநாள் உற்சவமுண்டு.

II. பங்குனிமீ—பங்குனி உத்தரம் உத்தர நாளில் ரதாரோஹணம், த்வஜாரோஹணமான 7-ம் நாள் பின்னும் மூன்றுநாள் உற்சவமுண்டு.

III. வைசாகமீ-விசாகத்தில் ரதாரோஹணம்.

IV. கந்தர் சஷ்டி.

## The "Vivekachintamani."

The October number of this interesting and instructive Tamil Magazine opens with a spirited article which affirms the truth of the principle in the Maxim "the undedicated life and undisciplined mind lead to evil." It is followed by an interesting sketch of Sri Sankara "The Orphan's Cry" is highly spiritual in its tone as a the article on A O. Hume. Under the headline "The Kinglom of God within,"the Origin of Life"is discussed with an intellegent grasp of the first principles involved. Other articles of interest are :—"Wisdom is all-powerful," the constitution of Man; Easy Lessons in Economics; Historical Selection; and Gleamings from Folklore.

The magazine, we are glad to note, is maintaining its unique position as a journal of recognised spiritual and moral force, and we foresee a large scope for its usefulness in the moral and spiritual line, in which it stands foremost. The publishing agency deserve a word of commendation for their zeal in working up the journal to its original position—*The Indian Patriot.*

அற்பிசிமு 30வ ஸ்கந்தர்சஷ்டி. கார்த்திகைமு 9வ பரணிதீபம்; 10வ கார்த்திகைநாள்.



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 20.] **1912**வூ டிசம்பர்மீ, பரீதாபிவூ மார்கழிமீ [சஞ்சிகை. 9.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminatha Iyar, Editor, & Founder V. C.

S, Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரோயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷபார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சூங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேக சிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கே உரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்ம விக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் பாடஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே நினுன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்






விவேக சிந்தாமணி.

# PRINCIPLES OF PROGRESS.

## "The Democratic Ideal of Society"

"எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்."

———:o:———

(Dr. Hendersan's Last Barrows Lecture.)

சிகாகோவில் கூடிய "பார்லிமெண்ட் ஆவ் ரிலிஜியன்ஸ்" என்னும் ஸர்வமத ஸம்மத சபையின் அக்கிராசனாதிபதியாயிருந்த டாக்டர் பாரோஸ் அவர்கள் ஞாபகார்த்தம் மிஸ்ஸஸ் காரொலைன் ஹாஸ்கெல் என்னும் சீமாட்டி யேற்படுத்திய நிதியிலிருந்து இரண்டு வருஷங்களுக்கொருமுறை சிகாகோவிலிருந்து பிரபலவித்வானான ஒருவர் இந்தியாவுக்கு வந்து பிரசங்கம் செய்துபோவது வழக்கமாயிருக்கிறது அந்த வழக்கப்படி இந்த வருஷம் ப்ரொபெஸர் ஸி. ஆர். ஹெண்டர்ஸன் என்பவர்வந்து 'சென்னை அண்டர்ஸன்க்ஹாலில் பிரசங்கங்கள்செய்து சென்றார். அவர் நவம்பர்மீ 1உ வெள்ளிக்கிழமை சாயந்திரம் செய்த பிரஸங்கம் கடைசியானது. அது மிகவும் முக்கியமானது. அந்தப் பிரஸங்கத்தில் அவர் மன்குலமும் ஜனசமூகமும் முன்னுக்கு வருவதைப்பற்றிப் பிரசங்கித்தார். மன்குலம் என்பது மன்னுயிர் எல்லாவற்றிற்குமே உரியபேர். ஜனசமூகம் என்பது ஜனங்கள் ஜாதி, மதக் கோட்பாட்டை யனுசரித்து அல்லது தேச மத ஆசாரங்களையொட்டி ஒரு சமூகமாக (குமுக்காக)க்கூடிவாழ்தலைக் குறிக்கும்.

"எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்."

என்பது நாம் நிதர்சனமாகக் கண்டதோர் கொள்கை. ஒன்றுபட்டவிடத்தில் சுசமும் இரண்டுபட்டவிடத்தில் துக்கமும் இருக்கவேயிருக்கிறது. இது இல்வாழ்க்கை யென்னும் குடும்பம் முதல் பொதுஜனவாழ்க்கையென்னும் தேசவாழ்க்கை வரையிலும் அதற்கப்பால் உலக முழுவதுக்கும் உண்மையாய்ப் பொருந்தும் தத்துவமாயிருக்கிறது. ஒரு குடும்பத்தில் தெய்வசாக்ஷியாக ஒருவரை யொருவர் நேசித்து ஒத்து வாழ்வதாகக் கைப்பிடித்த ஆண் பெண்ணாகிய புருஷன் மனைவி ஒத்துவாழ்வது துர்லபமாயிருக்க, பல்கோடி ஜனங்கள் நிறைந்த ஒரு தேசத்திலுள்ள ஜனங்களெல்லாம் ஒன்றுபட்டு வாழ்வது எப்படி? யென்று கேட்கலாம். இதனுண்மையை திர்க்க தரிசிகளான சித்தபுருஷர்கள் நன்றாகவெடுத்தோதி யிருக்கிறார்கள். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே செய்மின் நாணுமே" யென்று திருமூலர் ஓதிய திருமந்திரத்தின் உண்மையை ஆய்ந்தறிந்துய்யவேண்டும்.

மன்குலமெல்லாம் ஒன்று. "ஒன்றே" யென்பதற் கிரண்டில்லை. இதைத்தான் டாக்டர் ஹெண்டர்ஸன் 'டெமாக்ரிடிக் ஐடீல் ஆவ் ஸொஸைடி" (Democratic Ideal of Society) என்று சொன்னார். இலக்கியம் இலக்கணம் என்றுள்ள இரண்டில் இலக்கியம் (லக்ஷியம்) பிரத்தியக்ஷப் பிரமாணமாகக் கண்டறியத்தக்கது. இது காண்பான், காட்சி, காண்பொருள் எனத் திரிபுடி ஸாஹித்தியத்தால் ஒன்றேயாகும். இலக்கணம் என்பது பலவாயிருக்கும். குறியொன்றே; குணம்பல. இந்த ஒன்றிலும் பலவிலும் அதிஷ்டானமாயும் பிரத்தியக்ஷமாயு மிருப்பவன் ஒருவனே! அவன்தான் தேவன். அவன் ஏகனும் அனேகனுமா யிருக்கிறான்.

அவனுக்கு ஏகத்துவம் லக்ஷியத்தை யொட்டியும் அனேகத்துவம் லக்ஷணங்களை யொட்டியும் ஏற்படுகிறது. மனிதன் ஸ்தூலரூபத்தில் அணுத்திரண் மயனாகவும் சூக்ஷ்மரூபத்தில் மாயை கடந்த மஹத்ரூபியாகவும், காரண ரூபத்தில் அணுவுக் கணுவாயும் மஹத்துக்கு மஹத்தாயுமிருக்கிறான். ஸ்தூல சூக்ஷமப் பிரபஞ்சங்களும் அப்படியே. ஸ்தூலப்பிரபஞ்சத்து

க்கு அதிஷ்டான தேவதையாகிய விராட்புருஷன் விசுவதேவனை நம்மவரால் பூஜிக்கப்படுகிறான். பிதிர் தினங்களில் இந்தப் பூஜை விசேமாக நடக்கிறது. நித்தியப்படி நியம நிஷ்டையிலும் வைசுவதேவமானபின் வாயஸ பலியென்று காக்கைக்கு ஒரு பிடியன்னம் போட்டுவிட்டுத்தான் குடும்பிகள் போஜனம் செய்வார்கள். இதனால் டாக்டர் ஹெண்டர்ஸன் சொல்லிய ஜீவகாருண்யம், பரோபகாரம், ஜனசமஷ்டிபாவம் (Democratic Ideal) இவையெல்லாம் இந்தியாவில் ஜனங்களெல்லாரும் ஏற்றுக்கொண்ட மதக்கொள்கையாகி நித்தியப்படி அனுஷ்டானத்திலிருந்ததென்று நன்றாய் விளங்கும். ஆனால் இப்பொழுது மேற்றிசை நாகரீகம் மேலிட்டுப் போனதில் அந்த அனுஷ்டானங்களின் உண்மையும் உள்ளர்த்தமும் உணர்வாரின்றிப் போனபடியால் அவ்வழக்கங்கள் மூடமாய் அனுஷ்டிக்கப்பட்டும் அடியோடு கைவிடப்பட்டும் வருகின்றன.

“ஊரார் பிள்ளையை ஊட்டிவளர்க்கத் தன் பிள்ளை தானே வளரும்” என்கிற பழமொழி ஆண் பெண் எல்லாருக்கும் தெரிந்ததாய் வழங்கி வருகிறது. இதனால் டாக்டர் ஹெண்டர்ஸன் போதித்த பரோபகார சிந்தையும் நம்மவர் மனதில் வேரூன்றி வளர்ந்த கொள்கையே என்று ஏற்படுகிறது.

“சன்மார்க்கமின்றி நன்மார்க்கமில்லை” யென்னும் பழமொழியினால் Morality யென்று சொல்லும் சன்மார்க்கம் இதயசுத்திக்கு இன்றியமையாச் சாதனமாக அனுஷ்டிக்கப்பட்டு வந்தது விளங்கும்.

மனிதன் மனத்தோடு பிறந்தவன்; மனம் சங்கல்ப விகற்பரூபமாயுள்ளது. ஆகையால் மனிதன் நினைப்பு மறப்புத் தொழில்களுக்கு அதிகாரியாகவுள்ளவன். நினைப்பும் மறப்பும் மனிதனுக்கு உட்பட்டு (அடங்கி) நடக்கவேண்டியது. புலன் பொறிகளை அடக்கியாளத் தெரியாமல் அவைபோனவழியில் தான்சென்று புலன்வழிச் சென்று புலம்பி பழமவனைபடியால்தான் தனக்கடிமையாயிருந்து தொழிலியற்ற வேண்டிய நினைப்பு மறப்பு என்னும் அடிமைகள் வரம்பு கடந்து அத்துமீறி, யஜமானனை அடிமைபோல் நடத்தி வருகின்றன. “தலையிருக்க வால் ஆடலாமா?” என்கிற பழமொழி பொய்க்க, தலை (நினைக்கும் கருவி) தன் வசமாயிருக்க, வால் (நினைப்பு மறப்பு) ஆட்டம் காட்டி ஆளை முன்னுக்கு வரவிடுவதில்லை. இப்படியாக நினைப்பு மறப்பு ரூபமாயுள்ள சித்தவிருத்தியானது சித்தத்துக்குபஜமானனாகிய நினைப்பானை (Thinker) புலன்வழியே இழுத்துக்கொண்டு விஷயபோகம் என்கிற சேற்றிலமிழ்த்திவிடாதிருக்கவே த்விஜர்களுக்கு மனோசிக்ஷையாக ஸந்தியாவந்தனம் என்கிற நியமம் ஏற்படுத்தினார்கள் நமது முன்னோர்களான ரிஷிகள். இக்காலத்துக் கல்வி சற்றுக் கசடறுமக்கள் அதையொழித்துவிடவேண்டுமென்கிறார்கள். ஏனென்றால் த்விஜர்கள் இக்காலத்தில் ஸந்தியாவந்தனம் சரியாகச் செய்வதில்லையாம். இதுதான் “போட்டி போட்டுக்கொண்டு கெட்டுப்போகிறது!” என்று சொல்கிறது. ஏதோ பால்ய சேஷ்டை விளையாட்டில் நித்தியப்படி செய்யவேண்டிய நியமநிஷ்டைகளைப் பராக்காய் விட்டுவந்தால் பின்னர் தான் செய்த பிசகைக்கண்டு திருத்திக்கொள்ள வழியில்லாமற் போகும்படி அந்த அனுஷ்டானங்களையே விலக்கிவிட்டால் அப்புறம் மனிதன் முன்னுக்கு வருவது எப்படி? பின்னுக்கு வாங்கவேண்டியதுதான்! இந்த உண்மையை டாக்டர் ஹெண்டர்ஸன் நன்றாக வற்புறுத்திக் கூறினார்.

மனோதர்மம் கூடப்பிறந்ததேயன்றி மனப்பயிற்சிகூடப் பிறந்ததல்ல. பூர்வ ஜன்ம வாசனையென்பது வித்தில் மரம்போல், முன்ஜன்மங்களில் ஜீவன் அனுஷ்டித்த சிக்ஷா தீக்ஷைகளினாலுண்டான புத்திகூர்மையைக் குறிக்கும். இந்த ஜன்மத்தில் சகவாஸதோஷம் நீக்கி ஸாது

ஸங்க விசேஷத்தால் அந்த நற்குண வாசனைகளைப் ப்யிற்சிசெய்து வளர்த்தாலன்றி அவை பயன்படாது. வித்து நல்லதானாலும் நிலவள நீர்வளமும் ஏற்றதாய் ஒத்திருக்கவேண்டும்.

“கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்” என்றார் ஔவையார். மனதைச் சிக்ஷைதிக்ஷைகளால் பழக்கினாலன்றி அது வழிக்கு வராது. இப்படி சிக்ஷைதீக்ஷைகளால் மனதைப்பழக்கி அதை யஜமானுக்கு அடங்கிய வேலைக்காரனாகச் செய்யு முறைக்குத்தான் யோகாப்பியாஸம் என்று சொல்கிறது. யோக சாஸ்திரங்களையும் யோக சூத்திரங்களையும் பண்டிதர்கள் உதவிகொண்டு படித்து முடித்துவிட்டு நாய் எலும்பைக் கௌவிக் கடித்து ஆனந்திப்பது போல், அதன் அனுஷ்டானத்தில் வெளியாகும் அற்புத ரகஸியங்களை அனுபவித் தறியாமல் சண்டப்பிரசண்டமாய்ப் பேசுவதால் பிரயோசனமில்லை. வீண்வேஷமும் விதண்டாவாதமும் விருத்தியாவதன்றி வேறுபயனில்லை. “வேதமுதலானநல் லாகமத் தன்மையை விளக்குமுட் கண்ணிலார்க்கும், மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும், வீறுவாதம் புகலுவாய் வாதநோவாளர்க்கும் எட்டாதமுக்கணுடையாமருந்துக் கமிர்தமே” யென்றாராதலால் சிரவணமனன நிதித்தியாஸமின்றியும் குருவருளின்றியும் மனதை யடக்க முடியாது. மனத்தை யடக்கியாண்டாலன்றி மனுஷ ஜன்மம் வியர்த்தமேயாம். ஆகைபால் சித்தவிருத்தி நிரோதமாகிய நல்யோகத்தை முறையறிந்து செய்யல் வேண்டும். இதற்கு ஸந்தியாவந்தன சிக்ஷையைப்போல் இல்லறவழி நிற்பார்க்கு அடுத்தது வேறில்லை.

ஓம் தத்ஸத்.

—:-:—

# The Origin of Life in Its Collective Aspect.

## கந்தர் ச்ஷ்டி.

### கார்த்திகேயாவதாரம்.

“ஆறு விரித்தனன்”—திருமந்திரம்.

—:(o):—

"Evolution is the Law of Life."
"In the Beginning (of Evolution) was the Word;"
"The Word was with God;" "The Word was God."

### பிரபஞ்ச நாடகம்.

“ஓடமாமுட லிதுவென்று உண்மையி லோராரே!
வேடமா மிப்பிறவி யுலகுமோர் நடர்க்களமாம்!
வேடம்போட் டாடவந்த நாடகன் சீவன்தானே!
ஆடவன் ஆங்காரி ஒட்டுவென் ஓங்காரி!”

MOTTO:—உள்ளுரை.

“ஐயனே யுனையன்றி யொரு தெய்வம்
கையினாற் றொழுவுங் கருதேன் கண்டாய்!
பொய்யனாகிலும் பொய்யுரையேன் சுத்த
மெய்யனா முனக்கே வெளி யாருமே.”

இந்தப் பிரபஞ்சநாடகமாகிய உலக வாழ்க்கையில் உலகமே நடர்க்களம்—அதாவது நாடகசாலை; உலகத்தில் உடலெடுத்துப் பிறப்பதாம் பிறவியே நாடகவேஷம்; அந்த வேஷம் போட்டுக்கொண்டு ஆடவந்த நாடகன் ஜீவன். அவன் ஆங்காரம் (அஹங்காரம்) என்கிற சூத்திரத்தில கட்டுப்பட்டு ஆடுவதால் ஆங்காரியாவன்; அவனை சூத்திரப்பதுமைபோல் ஆட்டிவைப்பவன் (‘ஓட்டுவன்’)‘ ஓங்காரி’ யென்னும் பிரணவஸ்வரூபி. இந்தப் பிரணவ ஸ்வரூபியை அறிந்து கொள்வதே இந்த ஜன்ம மெடுத்ததற்குப் பலன். பிரணவஸ்வரூபி “சக்திமான்-சக்தி” யெனக் ‘காரண—காரிய’ ரூபமாய் விளங்குகிறான். காரணத்தில் சக்திமானாக விளங்குபவன் தான் அரூபியாக விருந்துகொண்டு தனது இணைபிரியாத சித்சக்தியே தன் ஸ்வரூபமாகக்கொண்டு விளங்குகிறான். அப்போது அவன் ஆனந்த ஸ்வரூபியாகிறான்.

"அறிவார் பராசக்தி யானந்த மென்பார்
அறிவார் அறிவுரு வாமவ னென்பார்
அறிவார் கருமம் அவளிச்சை யென்பார்
அறிவார் பரனும் அவளிடந் தானே"

யென்பது திருமந்திரோபதேசம். அத்வைதானந்த மயமா யிருக்கும் பராசக்தி (அபின்னசக்தி), அறிவுருவாய் (சின்மயமாய்), கருமத்துக்கெல்லாம் அதிகாரியாய், பரனுக்கிருப்பிடமாய் இருக்கும் இரகஸியத்தை அறிந்தனுபவித்தவர் யாரோ அவரே "அறிவார்"—ஞானிகளாவார். அந்த "ஞானசம்பந்தம்" பெற்றவர்கள் "அருட்குழவி"யாவார். அருட்குழவி யென்றும் ஞானசம்பந்தமூர்த்தியென்றும் ஒன்றே. அப்படி அருட்குழவியாகி, அருட்கண்ணால் அண்ணலைத்தரிசித்து (சாக்ஷாத்கரித்து) அவன் சிற்சக்திவசமாகி "அவளிச்சை"ப்படி கருமமியற்றுவார் "அடியவர்" ஆவர். "I work because my Father works" என்று யேசுகிறஸ்து சொன்னதின் கூடார்த்த மிதுவே. இப்படி அடிமைத்தொழில்பூண்டு பராசக்தியிடம் தன்னை யறிந்தவர்க்கு பகவான் தோழனுகிறுர். ஏனெனில் அவர்கள் பராசக்தியோடபேதமாய் ஆனந்தமயமாய் நிற்பதால் அந்த ஆநந்தத்துக்கு அக்கியமில்லாத அவர் அடியார்க்குத் தோழனுயமர்ந்து உள்ளுற்றுடலிடங் கொள்கிறுர். அப்படி சகஜானந்தம் பெற்றுர் "தம்பிரான் தோழராவார்."

சகஜானந்தத்திலும் பெரிது சகஜஞானம். ஏனெனில் அது ஆனந்தம் அநுபவம் அநுபவி யென்கிற சுத்ததிரிபுடியும் கடந்துள்ளது. சத்ததுதானே சித்தாகவும், சத்தும் சித்தும் தானே ஆனந்தமாகவு மிருப்பதால் "சச்சிதானந்தப் பழம்பொருளா" யிருப்பவர் ஆதியந்தமற்ற கடவுளே யாதலால் நிலையெலாங் கடந்த அந்நிலைபெற்றுர்க்கு பகவான் சகளீகரிக்கும் பொழுது தன்னை "அடியார்க்கடியன்" என்று சொல்லிக்கொண்டிருக்கிறுர்.

இதைத் "தில்லைவாழந்தணர்தமடியார்க்கு மடியேன்" என்று தியாகராஜப் பெருமான் தம்பிரான்தோழரான சுந்தரமூர்த்திஸ்வாமிகளுக்கு அடியெடுத்துக் கொடுத்து திருத்தொண்டத்தொகைப்பதிகம் பாடச்சொன்னுரென்கிற ஐதிகத்தில் பாக்கக்காணலாம். பகவான் திருக்கைலாஸத்தில் தம் பக்த கோடிகளாகிய அடியார் தம் பாததூளியைப் பூஜை செய்துகொண்டிருக்கிறுர் என்னும் ஐதிகத்திறு மிதனுண்மையைப் பாக்கக் காணலாம். இப்படி அடியார்க் கடியனை அன்பனைக் காண்பதே கண்பெற்றதற்குப் பலனும். அவனைக் காணுக் கண் குருட்டுக்கண். அவன் இன்னிசை வார்த்தையாம் நாத கீதத்தைக் கேளாச்செவி (நாதாநுசந்தான மில்லாச் செவி) செவிட்டுக் காதேயாம். இப்படி 'காணுக்கண்' 'கேளாச்செவி' படைத்தவர் உலகத்தில் பெரும்பான்மையரா யிருத்தலால் தான் "சந்தை யிரைச்சலிலே குடியிருந்து கெட்டேனே" யென்று பட்டினத்தடிகள் இரங்கற்பா பாடியிருக்கிறுர். பேதத்தைக்கண்டும் காணுர் யாரோ, வீண்தர்க்க வாதத்தைக் கேட்டும் கேளார் யாரோ, அவரே உண்மையடியாராவர். அவர்கள்,—

"கண்ணிற்காண்பதுங்காட்சி கையாற்றெழில்
பண்ணல்பூஜை பகர்வது மந்திரம்
மண்ணுடைந்தும் வழங்குயிர் யாவுமே
யண்ணலே யுன் அருள்வடி வாகுமே!"

யென்று திருவருளில் மூழ்கித்திளைத்திருப்பர்.

இந்தப் பெறற்பேறும் பாக்கியம் பெற்றுலே உய்யலாம். ஆகையால்தான் தாயுமானஸ்வாமிகள் போன்ற பெரியோர்கள் இராஜ்ஜிய பரிபாலனத்தைத் திரணமாய் விட்டொழித்து ஆத்மபரிபாலனம் செய்வதையே பெரிதாகக் கருதி உலகைத்துறந்து உண்மைக் குழைத்தார்கள். எத்தைவிட்டபோதும் மனதை விட்டொழித்தல் மஹாதுர்லபம்: இதற்கு "சகலத்தியாகம்" என்று பேர். ஆகையால்தான் சித்தவிருத்தி நிரோதஞ் செய்தலே ஒரு பெரிய முறையா

கக்கொண்டு யோகசாஸ்திரம் என்னும் மனதை யடக்கும் வழியைச் சிறப்பாகக் கற்பித்தார் கபிலர் பதஞ்சலி முதலிய மஹாரிஷிகள் எல்லாரும். மனதை யடக்கினாலன்றி மனோதத்துவம் விளங்காது. மனோலயம், மனதின் தொழிலாகிய சங்கல்ப விகல்பமொழிந்தாலன்றி மற்றப்படி சித்திக்காது. இந்த மனோலயம் வாய்த்தனுக்குக் "கேவல கும்பகம்" இன்றியமையாச் சாதனமாம். "கேவலகும்பக" விசேஷத்தால் இந்திரியங்கள் தாதுக்களெல்லாம் பிராணனில் லயமாகும். அப்பிலுப்புக் கரைந்தாற்போல ஸ்தூலத்தைச் சூக்ஷ்மத்தில் கரைக்கக் கற்றால் "பூத முதலாகவே நாதபரியந்தமும்" உள்ள தத்துவங்களெல்லாம் கேவலம் நாதவடிவாகி நிற்கும். அது எப்படியென்றால், நாமரூபமான சட்டிபானைகளெல்லாம் அவற்றின் காரணமான மண்வடிவானாற்போல வென்றறிக. இது "பிராண கேவலம்."

"கேவலம் பிராணன் மாத்திரமாய்" நின்ற நிலையில் எல்லாம் நாதவடிவாக, அந்த நிலையில் எல்லா சித்திகளும் வாய்க்கிறது. எதற்கும் அதிஷ்டான தேவதையின் சகாயம் வேண்டும். அந்த அதிஷ்டான தேவதை திரோபவசக்தியாக மறைந்துறைவதால் அதன் அனுகூலம் பெற இஷ்டதேவதை மூலமாய் அதிஷ்டான தேவதையின் சகாயம் பெறலாம். இவ்விரண்டிற்கும் "அஹம், புறம்" என்கிற வித்தியாஸமின்றி வேறு பேதமில்லை. "அஹம்-புறமிரண்டுமொக்க வுணர்ந்தார்" உண்மையுணர்ந்தாராவர். இவர்களுக்கு தத்துவ தரிசிகள் என்று பேர். இவர்களை மாயை மயக்காது. "நாதவடிவு" என்றாலும் "மந்திரம்" என்றாலும் ஒன்றே. "நாதவடிவாகிய மஹாமந்திராதிரூபியே!" யென்றதனால் மந்திரங்களுக்கெல்லாம் அதிஷ்டான தேவதை ஸ்ரீதேவியென்றுணர்க. அவள் உருவாயும் அருவாயுமிருப்பள். உருவில் "நாதவடிவாகவும்" அருவில் "நாதாந்த வெட்டவெளியாகவும்" இருப்பள். சமயதீக்ஷைகளின் அதிதேவதை தேவியே. திவ் என்னும் தாதுவிலிருந்துண்டான தேவியென்னும் சப்தத்துக்கு அர்த்தம் "அருட்பிரகாசம்" என்று கொள்க. இந்த அருட் பிரகாசத்துக்கு ஒற்றதாய் மனிதனுள்ளத்திலுறைவது தேஜோமனம். இந்த தேஜோமனமானது அநாஹத சப்தத்தினுள்ளுறை நாதத்வனியினுள்ளிருப்பதாக சுருதிகள் கூறும். இதை அப்பியாச யோகத்தால் அனுபவத்திலறியவேண்டும்.

நாதத்தின்வடிவு தேஜஸ். இந்ததேஜஸின் மூடி (ஆவரணசக்தி), த்வனி. இவை மின்னலும் இடியும்போல்சம்பந்தப்பட்டுள்ளன. த்வனியின்மூடி (ஆவரணம்)சத்ததன்மாத்ரை (mystic sound). இந்த சத்தம் ஆகாசத்தினுள்ளே உறையும். ஆதலால் சத்தத்திற்கு மூடி (ஆவரணம்), ஆகாசமென்பர். ஆகாசம் தகராகாசம் (சிற்றப்பலம்), பொன்னம்பலம் (பேராகாசம்) என "அஹம்-புறம்" ஒட்டி "பிண்டாகாசம்" என்றும் "அண்டாகாசம்" என்றும் விளங்கும். வித்துள்மரம்போல், பிண்டத்துக்கு மூலஸ்தானமாயிருப்பது பிண்டாகாசம் அல்லது சிற்றம்பலம். இது தூய்மைபற்றி அழகே வடிவாயுடையதாயிருப்பதால் இதைத் "திருச்சிற்றம்பலம்" என்று வணங்குவர் பெரியோர்.

இந்தத் திருச்சிற்றம்பல சேவைபெறும் இரகஸியத்தை விளக்கும் வித்தைக்குத் "தஹர வித்தை" யென்று பெயர். இது ஸாதாக்கியமென்கிற நித்தியகலையொன்றே யுளதாய் விளங்கும். நவகண்டரூபமான நவவ்யூகப்பிரபஞ்சமாம் பிரஹ்மாண்டத்துக் கிருப்பிடமான மூலஸ்தானத்துக்குப் பேராகாசம் அல்லது மஹாபிந்து வென்று பேர். இதனுண்மை யுணர்த்தும் வித்தைக்குத்தான் "ஸ்ரீ வித்தை" யென்பது. தஹரவித்தையில் அப்பியாஸ மில்லாதார்க்கு ஸ்ரீவித்தை பலிக்காது. அதாவது அஹத்தூய்மையில்லாதார் புறத்தில் தூய்மையின்வடிவைக்

காணார். அவர்களுக்கு மஹாபரிசுத்தமானபொருள்களெல்லாம் மிகவுங் களங்கமுற்றதாகவே விளங்கும். இதைச் சித்தர்பாஷையில் 'தூய்மையெல்லாம் தூமையாம்'' என்று சொல்லுவர். தஹராவித்தையில் தேர்ந்து அஹத்தூய்மை வாய்க்கப் பெற்றவர்கள் தூமையிலும் தூய்மையே காண்பர். இதைச் சுட்டியே தாயுமானஸ்வாமிகள் "பொன்னை மாதரை"யென்று தொடங்கும் பாடற்றொடக்கப் பிரிவில்,—

"அண்ணலே யுன்னடியவர் போலருட்
கண்ணினாலுனைக் காணவும் வாவெனப்
பண்ணினாலெம் பசுத்துவம்போயுயும்
வண்ணமாக மனோலயம் வாய்க்குமே"

யென்று பாடியிருக்கிறார். பின்னுமவர்,—

"வாய்க்குங்கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பகலற்றிடா
நாய்க்குமின்பமுண்டோ! நல்லடியரைத்
தோய்க்குமானந்தத் தூவெளிவெள்ளமே!"

யென்று கூறியிருப்பதால், உண்மையான மெய்யடியாரை "ஆனந்தத்தூவெளி"யான பராகாச (பேராகாச)த்தில் மூழ்கச்செய்யும் அகண்டானந்தப் பெருக்கே! "மௌனம்," "மௌனம்" என்று சொல்லிக்கொண்டு வாக்கு மௌனமும், காஷ்டசமாதிநிஷ்டையாகிய தேஹம் கட்டையாகக் கிடைத்தலாகிய காஷ்டமௌனமும் மட்டும் அப்பியசித்து, இராப்பகலற்று சுயஞ்சோதி விளங்கும் மனோமௌனம் சித்திக்கப்பெறாத இந்த அற்பஜீவனுக்குப் பேரின்பம் சித்திக்குமோ! என்று கரைந்துருகிக்கேட்கிறார். "பால் ஆறாகவோடினாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்கவேணும்" என்கிற பழமொழிப்படி,—"அகண்டாகார சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப் பூரணமா யேகவுருவாய்க் கிடக்குதையோ!" என்றவாறு பேரின்பவெள்ளம் கரையற்றுக் கிடக்கினும், மனோமௌனம் சித்திக்கப்பெறாத அற்பஜீவன்கள் சிற்றின்பப்பேறே பெற்றனுபவிக்க யோக்கியமான காரணத்தால் நாய்க்குச்சமானமாய் அதை நக்கிக்குடித்துச் (அதில் ஒரு சிறிதுதானே புசித்து) சிற்றின்பமனுபவிப்பர். இது உலகத்தார் இயல்பாதலால் இராஜ்யமாளும் தொழில்புரிந்து அதன் குட்டையறிந்த தாயுமானவர் உலகத்திலுள்ள தேசத்தாரையெல்லாம் விளித்து மனோலயம் பெற்றுப் பேரின்பமனுபவிக்க வாரீர் என்று கூவியழைக்கும் திருக்கூப்பாட்டைத் தீபாவளியின்மஹத்துவக் கூற்றாகவெடுத்துக் கூறியிருக்கிறோம். அது எல்லாருக்கும் பயன்படும்படி அதற்கு இங்கிலீஷ் வார்த்தைகளுமமைய வமைத்துப் போர்முகத்திற் புகுந்துழலும் உலகத்திலுள்ள ராஜ்யத்தார் எல்லாருக்கும் கேட்கக்கூவியதோர் திருக்கூப்பாடாகப் பிரசுரித்திருக்கிறோம். நாதவடிவாகிய மஹாமந்திரரூபியின் அருளால் அது ஜகத்தாரெல்லாருள்ளத்தினுள்ளும் படவென்றே மஹாபலியின் வலியடங்க உலகளந்தான் பாதந்தொழும் தீபாவளியின் மஹத்துவமாகக் கூறியுள்ளோம். அதை மற்றோர் பக்கத்தில் கண்டுணர்ந்துய்பவர் உய்க!

தாயுமான ஸ்வாமியவர்களின் திருவுள்ளப்பாங்கு விளங்க இன்னமொரு பாட்டையிங் கெடுத்துரைக்கிறோம். அது இது:—

"தூயதான துரிய அறிவெனும்
தாயும்நீ யின்பத் தந்தையுநீ யென்றால்
சேயதா மிந்தச் சீவத்திர ளன்றோ
ஆயும் பேரொளியான வகண்டமே!"

இந்த பேரொளியான (பேராகாசமான) அகண்டம் யாருக்குக் கிட்டுமெனில் சொல்கிறார் கேண்மின்:—

"அகண்டமென்ன அருமறை ஆகமம்
புகன்ற நின்தன்மை போதத் தடங்குமோ
செகங்களெங்குத் திரிந்து நன் மோனத்தை
யுகந்தபேர் உனை ஒன்றுவர் ஐயனே!"

கடவுளின் தன்மை அகண்டம். அதை அடையப் பொருந்த தோற்றமெல்லாந் தானாகிக் கண்டு தனக் கந்நியமானதொன்றில்லாததுபற்றி

ஒன்றை நினைக்கவும் மறக்கவும் பேசவும் நிமித்தமில்லாததுகண்டு ஆனந்தத்தைத்தரும்(மனோலயமாகிய) நன்மோனத்தைச் சந்தோஷமாய் ஏற்றபேர் இந்த சிவத்திரளெல்லாம் ஒன்றான (Life of Humanity) சேயதாகி, ("Son of Man") என்கிற அருட்குழவியாகி "தூயதான துரிய அறிவெனும் தாயை"க் கண்டு (Holy Ghost) தாய் எனவறிந்து திருஞானசமபந்தராகி, அந்தத் தாய் மூலமாய் அவளிலும் அபேதமில்லாத "பேரின்பத் தந்தை" யாகிய அப்பனைக் (Our Father in Heaven) கண்டு அப்பர் தாமே யாகி, அந்த அகண்டாகாரஸம் ஊற ஊற, இதய ஊற்றுப் பெருக்கால் "அகண்டாகார சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாயேகவுருவாய்க் கிடக்க" சகஜானந்தப் பூர்த்தியில் தம்பிரான் தோழராகி, அவருடன் "நாமினி யெடுத்த தேகம் விழுமுன்" அவ்விடபத்தைச் சிற்றின்பம் பேரின்பமென்கிற வியாஜமின்றி அகண்டாகார அனுபோகமாசப் புசிப்பதற்கு" ஏற்றவராவர். இந்த வுண்மையை யுணர்த்தவே சுந்தரர் திருவவதாரம் செய்தார்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் இதைப் புசித்துக் காட்டி யிருக்க, ஸ்ரீமாணிக்கவாசகர் ஆவர் மணிவாசகப் பெருமையால் (சித்தவாக்கால்) அகப்பொருள் புறப்பொருள் என்னும் பேதமின்றி எல்லா மொரு பொருளே அதுவும் அகண்டமாயுள்ளது என்று எல்லாரையும் அதைப்புசிக்கவழைக்கப் போடிமை பூண்டவதரிக்கலானார்.

"காகமுறவு கலந்துண்ணக்
கண்டீ ரகண்டாகர சிவ
போகமெனும் பேரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ
வின்புற்றிட நாமினி யெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாருஞ் சகத்தீரே."

யென்று காக்கை தன்னினத்தைக் கூவியழைப்பதுபோல மன் குலமாகிய தம்மினத்தைக் கூவியழைக்க வென்றே யவதார மாயினராதலால் அவர் மணிவாசகப் பெருமானாயினர். இப்படியாக சமயாசாரியர் நால்வரும் நமக்கு நல்லறிவூட்டவே யவதரித்தார்கள். இவர்கள் நால்வர் தொழிலோடு பதித்துவமும் சேவகத் துவமுமாகிய இரு தொழிலிஞ்சேர ஸ்கந்தர்-சஷ்டியில் உமையம்மை யெடுத்தணைக்க அறுவடிவும் ஒருவடிவாகி ஆறுமுகங்களோடு அறுகுண பூரணனாக அவதரித்தார் கார்த்திகேயர். அவருக்குரிய இந்தக் கார்த்திகைமாசத்தில் அவரை யுன்னி நாமெல்லோரும் கார்த்திகைத்திருவிழா கொண்டாடுவோமாக

குஹப்ரஹ்மம் தத்ஸத்.

———:o:———

## KARTIKAI-FESTIVAL.

### கார்த்திகேயமூர்த்தி—கார்த்திகைத்திருவிழா.

———:(*):———

தக்ஷப்ரஜாபதி செய்த யாகத்தில் தாக்ஷாயணி யென்னும் சதிதேவியார் தம் பதியை யிகழ்ந்த பிதாவின் பாபந்தீர அவனீன்ற உடலைவிடுக்க யாகாக்னியில் புகவும் மஹாதேவர் வைரவமூர்த்தியாக உற்பவித்து தக்ஷன்தலையைச் சேதித்துப் பின்னர் பரங்கருணையால் அவனுக்கு பசுத்துவம் கொடுக்க ஆட்டுத்தலையை ஒட்டவைத்துத் திருவிளையாடல் செய்தபின்னர், பராதேவி பரமனிடம் தோன்றி தான் தூயவுடம்பெடுக்க வேண்டி இமவான் மகளாக உற்பவிக்கவும், அந்த உருவில் தபவிருந்து தம் பதியை யடையவும் வரங்கோறினர். அப்படியே வரமளித்து, மஹாதேவர் தனியே தபவிருந்து சநகாதி நால்வருக்கும் தக்ஷிணாமூர்த்தி யுருக்கொண்டு கல்லாலடீழலிலிருந்து மௌனோபதேசஞ் செய்வாராயினர். பராதேவியார் இமவான் மகளாக உற்பவித்து வளர்ந்து வந்தார். கன்னிப்பருவத்தில் தானே கடவுளை நினைந்துருகிப் பதியையடையப்பெருந் தவமியற்றப்போக, மேநகையாம்

தாயவள் புத்திரியென்னும் அபிமானத்தால் அவ்வளவு இளம்பருவத்தில் நீ தபவிருக்க உன் இளங்கொடி போன்ற தேகம் ஆற்றாது என்றுன்னி "உ-மா"—"நீ தபவிருக்க வேண்டா" மென்று தடுத்தனள். அதனால் உமாதேவியென்று பேர்பெற்ற தேவியார் அவர் சொற்கேளாராகிக் கடுந்தபவியற்றிப் பதியைப்பெறலாயினர். மஹாதேவர் தபவிருந்தகாலையில் உலகெலாம் இயங்குந் தன்மையற்று பிரவிருத்தியின்றி யிருந்தமையால், தேவர்கள் அஞ்சித் தங்களுக்குற்ற இடுக்கண் களைவான் மாதேவரையடைந்து குமாரக்கடவுளையின்று தம்மைக்காப்பாற்றவேண்டுமென்று இறைஞ்சி நின்றனர். மஹாதேவர் பரங்கருணை வள்ளலாதலால் பரவிந்துவை யுன்னி யதனை ஆறு தீப்பொறிகளாக வெளியிட்டு பக்கத்திருந்த வாயு அக்னியைநோக்கி யதைக்கிரகிக்கும்படி ஆஞ்ஞாபித்தார். அவர்கள் ஒவ்வொருவரும் ஒருநிமிஷமளவும் அதைத் தாங்கித்தாளாமல் மிகத்தளர்ந்து தேகவிடாய் காண ஸப்தரிஷிகளும் அவர்பத்னியார்களும் அக்னிக்கு உபசாரணை செய்வாராயினர். அப்பொழுது காமத்தீபால் வாடிய அக்னி தேவர் அந்த ஸப்தமாதர்களையும் பற்ற நினைக்க, அவர்கள் ரிஷிபத்னிகளாகையால் தன்னிஷ்டம் பலிக்காது தவித்தனர். அப்பொழுது அக்னி தேவரின் பத்னியாராகிய ஸ்வாஹா தேவியார் அவர்படும் அவஸ்தையைக்கண்டு இதயம் பொருதவராகி விந்து நஷ்டமாகாதபடி தான் உடனே மஹாபதிவிரதையான அருந்ததியொழிந்த மற்ற ரிஷிபத்னிகள் அறுவருபாக உருக்கொண்டு அவர் உட்கொண்ட சிவாக்னியின் பயனாக வெழுந்த பராவிந்துவசம் அக்னிப் பொறியை அவருக்கு அறுபத்னியாக விருந்து கிரகித்து கருத்தரித்து வளர்க்க "வாத தேஹமாகிய" தாம்கொண்ட மாற்றரு ஆற்றாததுகண்டு அந்த மஹாவீரியத்தை சரவணப்பொய்கையில் விடுத்தனர். அது அங்குள்ள பங்கஜமலரிற்சேர்ந்து ஆறுமுகக்கடவுளாகப் பன்னிருகரங்களோடும் உற்பவிக்க, அதைக்கண்டு தம் குறைதீர்ந்ததென்று அகமகிழ்ந்த தேவர்கள் அவர் உதித்த நாளுக்குரியவர்களாகிய கார்த்திகை (வாருணம்) என்னும் நக்ஷத்திரக்கூட்டத்தைச்சேர்ந்த அறுமாதர்களையும் விளித்து அக்குமாரக்கடவுளை வளர்க்கும்படி யேவினர். அவர்களும் இதுவு மெங்கள் பாக்யமென்று சரவணப்பொய்கையிலிழிந்து குமாரக்கடவுளாகிய அறுமுகனை நண்ணி வணங்க, அவரும் திருவருள் பாலித்து ஆறு திருவடிவம் கொண்டு ஆறுகுழந்தைகளாகவிருந்து கார்த்திகைமாதர்கள் பாலூட்ட உண்டு வளர்ந்தார்.

பரமசிவன் உமாதேவியாருக்குக் குமாரக்கடவுளின் மஹிமையைச் சொல்லிவருகையில் "குமாரனே நாம், நாமே அவன்" என்றுஓதஅவர் தம்பதியைவேண்டி நம் குமாரனை யழைத்துவருவோமென் றழைக்க, பரமபதி தம் தேவியாருடன் சரவணப் பொய்கையடைந்து அங்கே பங்கஜமலர் தோறும் வீற்றிருந்து விளையாடிய குமாரஸ்வாமியைக் காட்டினர்.

பரமனார் உமையைப்பார்த்து "நம் குமாரனை யெடுத்து வருக" வென்றுரைசெய்யவும், தேவியார் ஆறுருவாயிருந்து விளையாடிய குழவிகளைத் தம்மிரு திருக்கரங்களாலும் சேர்த்தணைத்தெடுக்க ஆறுடலும் ஒருடலாகக் கலந்துகொண்டது. ஆதலால்தான் அவருக்கு ஸ்கந்தர் (கந்தர்) என்று பேர்வந்தது (கந்தம்=கலத்தல்). பரமனார் பரஞானப்பாலை யூட்டிடப் பெருங்கருணையோடும் கந்தஸ்வாமியை யெடுத்துத் தமது பக்கத்திலிருத்தி உமாதேவியாரையுமெடுத்து வாமபாகத்தில் (இடது பாகத்தில்) வைத்துக்கொண்டார். இப்படித் தாயொடு தந்தையும் சேயுமாய் உடனிருக்க ஒன்றுபட்டுவிளங்கிய சோமஸ்கந்தமூர்த்தியாம் (ஸ=உடன்; உமா=உமை) (ஸ+உமா=உமையுடன், ஸ்கந்த=கந்தஸ்வாமியும் சேர்ந்த) அற்புதத்திருக்கோலம் கொண்டு விளங்குவாராயினர். அப்பொழுது கார்த்திகை

மகளிரவரைப் பேரன்புடன் துதித்து வணங்கி நின்றார்கள்.

அத்தருணம் கைலாஸபதியாகிய எம்பெருமான் அவர்கள் மீது திருவருள் நோக்கஞ்செய்து நம்முடைய குமாரனாகிய இவன் உங்களால் வளர்க்கப் பட்டமையால் கார்த்திகேயன் என்னும் பேரைப்பெறக் கடவன்! யாவராயினும் உங்கள் நட்சத்திரத்திலே நமது செல்வக் குமாரனை மெய்யன்புற்று வழிபடுவாராயின் அவர் வேண்டும் வரங்களைக் கொடுத்து முத்தியையுமளிப்போமென்று திருவாய் மலர்ந்தருளினர். கார்த்திகை மாதத்திலே கார்த்திகை நக்ஷத்திரந்தொடங்கிப் பன்னிருவருடங்காறும் அநுஷ்டித்து விரதத்தை உத்தியாபனஞ் செய்தவர் இம்மைப்போகங்களை யனுபவித்து உண்மையுணர்வுதலைக் கூடப்பெற்று கந்த சாயுஜ்யமடைவர் என்பது திண்ணம். அப்படியென்றால் †அருட்குழவியாகப் பெறுவர் என்றபடி.

மாதேவர்விட்ட பரவிந்து கார்த்திகைமாசம் சுக்கிலபக்ஷப்பிரதமை துவக்கி வளர்ந்து சஷ்டியில் பூரணகலையுடையதாகி விளங்கியதால், கார்த்திகைமாசத்துப் பௌர்ணமைக்கு முன் வரும் சஷ்டிக்குக் கந்தர்சஷ்டி யென்றுபேர். இந்த உற்சவம்‡சுப்ரமணியஸ்தலங்கள்தோறும் விசேஷமாய் நடப்பதுடன் பழனி ஸ்தலத்தில் பக்தர்கள் பார்த்துய்யுமாறு மிகவும் சேர்த்தியாய் நடந்தேறிவருகிறது.

"கந்தன்றனை நீர்போற்றிய கடனாலிவ னுங்கள்
மைந்தன்னெனும் பெயராகுக மகிழ்வா லெவ்ரேனும்
நுந்தம் பகலிடையின்னவ னேன்தாள் வழிபடுவோர்
தம்தம்குறைமுடித்தேபரந்தனை நல்குவமென்றான்."
—கந்தபுராணம், சரவணப்படலம்.

"கார்த்திகேயஸ்வாமீ! வரதகுலிசகேடம்வாமஹஸ்த
த்ரயேசதததமபயசக்திம்கட்கமர்யத்ரபேச।
தருணரவிஸமாபம்ஸ்வாதுபிஃபூஜ்யமாகம்
கமலவதந ஷட்கம் கார்த்திகேயம் பஜாமி.॥"
—குமாரதந்திரம்.

கார்த்திகேய மூர்த்தியைத் தியானம் செய்ய அவர் இலக்ஷணம்:—தாமரை மலர்போலும் செவ்வியுடை ஆறுதிருமுகங்களும், ஆறுதிருக்கரங்களும், வலப்பாலிற் கூர்மை பொருந்திய அழகையுடைய வேலாயுதம், வாள், அபயம் என்பனவும், இடத்திருக்கரங்கள் மூன்றினில் சிறப்புப்பொருந்திய வச்சிராயுதம், கேடகம், வரதம், என்பனவும்கொண்டு, நோய், பிணிமுதலியவற்றையும், பிறவிப் பிணியையும் நீங்கத் திருவருள் செய்யும் மூர்த்தியாம்.

மஹாலய அமாவாஸைக்குப் பின்னுள்ள சுக்கில பக்ஷத்தில் தேவியவதாரமாகி மஹாநவமியன்று பூரணமாய் நவவ்யூகங்களும் அமையப்பெற்று விஜயதசமியில் வில்லம்புவிடுத்து மனவிருளைப் போக்குவிக்கும் திருவிழாவும், அதற்குப்பின்வரும் கிருஷ்ணபக்ஷத்துச் சதுர்த்தசியில் வாமனாவதாரமூர்த்தி மஹாபலியின் வலியைக் குன்றச்செய்து உலகளந்த பெருமாளாக விளங்கியதும், அந்த வாமனரூபியே அருகுணபூரணனாய் அடுத்துவரும் சுக்கில பக்ஷத்தில் சந்திரன் கலையோடு வளர்ந்து கந்தர்—சஷ்டியன்று பூரணகலைபெற்று சூரசம்ஹாரம் செய்து தேவர்கள் குறைதீர்த்து அடுத்துவரும் பௌர்ணமி சேர்ந்த கார்த்திகைதினத்தில் தேஜோ லிங்கமாகி விளக்கும் அருணாசலக் கடவுளாகவும், கார்த்திகேய மூர்த்தியாகவும், கந்தஸ்வாமியாகவும் அவதரித்து, சிறுபொரியும் மலைவிளக்காய் யெங்கும் திவ்யதேஜஸ் விளங்கத் திருவருள் சாதிப்பது இப்பரத கண்டத்தார் செய்தபெருந்தவமேயாம். அடுத்த மார்கழிமீ திருவாதிரை நாளில் பகவான் தானே நடராஜமூர்த்தியாக பக்தகோடிகளுக்குத் தரிசனந்தந்து திருநடனம் செய்து காட்டுவார். இப்படி மாதந்தோறும் நடக்கும் மாதோற்சவங்களை உண்மைவிளங்க ஆராய்ந்து உள்ளன்போடு அநுஷ்டிப்பவர் நன்னெறி பற்றித் துன்பந்துடைத்தின்ப மனுபவிப்பாராவர். இது ஸத்யம், ஸத்யம்.

—:*:—

† Son of man *i.e.* of Humanity.
‡ சூரஸம்ஹாரம்.

## Sri Sankara A—Sketch.

## ஸ்ரீ சங்கரர்.

—:o:—

### ஆறும் அத்தியாயம்.

பின்பு மண்டனபண்டிதர் ஸ்ரீ சங்கரரைப் பார்த்து ஸ்வாமி! தேவரீர் சித்தாந்தத்தை நிலைநிறுத்தியதால் எனது தாபிமான மொழிந்து உண்மையுள்ளத்திற் பொருந்திற்று. ஆயினும், ஆசிரியர் ஜயமுனி செய்திருக்கும் கர்ம காண்டமே முக்கியமென்று கூறும் சூஸ்திரங்கள் பயனற்றதாக விருக்குமோ? என்று சந்தேகம் நீங்கினபாடில்லை என்று கூறினர்.

2. சங்கரர் மண்டனரைப்பார்த்து, உமது ஆசிரியர் ஜயமுனி பிர்மத்தினிடத்தே கருத்தினை யுடையவரே. ஆயினும், மனிதர்களுக்கு கடைசி லக்ஷியம் மோக்ஷமானதால், இம்மேலான பயனைப் பெறும் பொருட்டு படியேற்றுவிப்பதுபோல் முதலில் மறுமைப்பயன், புண்ணியபாவங்கள் உண்டெனக்கூறி, அவற்றுள் நற்பயனை யடைவதற்கு பேதத்தோடு கூடிய கர்ம மார்க்கத்தைப்போதித்து, அதனல் பாவத்தையொழிப்பித்து, பின்பு பயன் விருப்பத்தையு மொழிப்பித்து, கர்மநிலைமையை யுணர்த்தி, பிரம தத்துவத்தைப் போதித்து, அது கைவசப் படும்பொருட்டு முதலில் சகுண உபாஸனையையும் பின் நிர்க்குண உபாசனையையும் கூறி, அதன்பின் அத்வைத உண்மையை உபதேசிக்கின்றார். இதுவே உமது ஆசிரியர் கருத்தும், அவர் குருவான வேதவியாசர் கருத்துமாகும் என்றனர்.

3. அப்பொழுது மண்டனமிஸ்ரர் தமது குருவாகிய ஜயமுனியைத் தியானிக்க, தன்னாலேயே நம்பிய "மாணுக்கனைக் கடைத்தேற்றும் பொருட்டு உடனே அவர் மண்டனரெதிரிற்றோன்றி, "வேதத்தில் கூறிய கர்ம மார்க்கத்தினையும் ஆசிரியர் வாக்கையும் நம்பிப் பயபக்தியுடன் தர்மத்தில் ஒழுகியதால் ஞான அதிகாரியான விஸ்வரூபரே! இந்தப்பரமஹம்சமான சந்நியாசி கூறியதே என்கருத்து. எனது குருவாகிய வியாசர் கருத்துக்கு நான் மாறுகூறியதில்லை. இதுவரை உனக்கு நான் குரு. இனி இவரே உனக்கு குரு" என்று கூறிவருகையில் ஜயமுனி கண்களுக்கு சங்கரர் தக்ஷிணமூர்த்தியாகத் தோன்றினர். உடனே ஜயமுனி, "ஓ மண்டனபண்டிதா! உன் புண்ணியம் பழுத்தது; இச்சந்நியாசி மனுஷனே யென்றாவது எம்போலியரென்றாவது கருதத்தகுந்தவரன்று. இவர் உலகத்தை நல்வழிப் படுத்தும்பொருட்டு அவதரித்த பரமேஸ்வரர். கிருதயுகத்தில் கபிலர், திரேதாயுகத்தில் தத்தாத்திரேயர், துவாபரயுகத்தில் வியாசர், கலியுகத்தில் சங்கரர் ஞானசாரியர்களென்று அறிவாயாக. நீயும் சாதாரணமானவனன்று. பிரமதேவன் அம்சையில் பிறந்தவன் என்று எனக்குத்தெரியும். இப்பிரபுவை சேவித்து தன்னியனாகக்கடவாய்" என்று கூறிமறைந்தனர்.

4. மண்டனபண்டிதர் கண்களுக்கு ஸ்ரீ சங்கரர் உடனே தக்ஷிணமூர்த்தி வடிவாகத் தோற்றினர். பண்டிதர் ஆநந்தமடைந்து தன் மனை, பொருள் முதலியவற்றை தம்மக்களுக்கும் மற்றவருக்குங்கொடுத்து சுத்த சத்வகுணத்தோடு சங்கரரைத் தியானித்து சந்நியாச ஆஸ்ரமத்தை வேண்டி நின்றனர்.

5. பின்பு சங்கரர் சரஸ்வதியை தியானிக்க அத்தேவியார் உபயபாரதி உருக்கொண்டு தோன்றினர். அப்பொழுது சங்கரர் என் வெற்றியில் உமது கருத்தென்னவென்று வினவ, உபயபாரதியார் சங்கரரைப்பார்த்து, "ஸ்வாமி! மண்டனர் உடலிற்பாதி யானதலின் என்னை வெல்லாவிட்டால் உமக்கு முழுவெற்றியில்லை" யென்று கூறினர்.

6. சங்கரர், உபயபாரதியின் வார்த்தையில் ஆச்சரியமும் ஆநந்தமுமடைந்து, உபய

பாரதியை சில வினாக்களால் தர்க்கத்திற்கு இஷ்டப்படாதவர்போல் ஆக்ஷேபிக்க, அவைகளுக்கெல்லாம் உபயபாரதி தகுந்த விதமாய் சமாதானம் பகரவே, சங்கரர் வாதிட வுடன்பட்டனர்.

7. எல்லாக்கலைகளுக்கும் தந்தையாகிய ஈசுவரனுக்கும், அக்கலைவடிவமாகத்தோற்றிய சாஸ்வதிக்கும் வாதுநடந்தால் அவற்றை யறிய வல்லவருமுண்டோ? வேதம், ஆகமம், ஸ்மிருதி, புராணம், இதிகாசம் முதலிய எல்லா நூல்களிலும் வாதம் தொடங்கப்பட்டு பதினேழு நாள் நடந்தது. உபயபாரதிகேட்ட ஒவ்வொரு வினாவிற்கும் சங்கரர் தயங்காமல் விடைகூறி வந்தனர். கடைசியில் உபயபாரதியார் இவரை எவ்விதத்தாயினும் தோல்விசெய்யக்கருதி, இளமைப்பருவத்திற்றானே சந்நியாசம் பெற்றவரும், அவ்வாஸ்ரம தர்மத்தைத் தவறாதவரும் எல்லாமறிந்தவரேயாயினும் உலகசொல்கைக்கு காமநூலில் பயிற்சியில்லாதவரும், அந்நூலைப்பற்றி வாதிக்கத் தகாத ஆச்ரமத்தை அனுசரிப்பவருமான பாலசந்நியாசியை நோக்கி, "மன்மதன் கலைகளெத்தனை? அவைகளின் இலக்ஷணமென்ன? எவ்விடங்களில் பிரயோகிக்கத்தக்கவை? அமிர்த நிலைகள் வளர்பிறையிலெவ்வாறு? தேய்பிறையிலெவ்வாறு? இவற்றை முறையே கூறவேண்டுமென்று காம சாஸ்திரவினாக்களைக் கேட்டனர்.

8. சங்கரர் இவ்வினாக்களுக்கு யாதொரு விடையும் கூறாமல், தமக்குள்ளே சிறிது சிந்தித்து, விடைகூறாவிடில் அறிவின் பெருக்கத்தைக்காட்டாது. கூறின், நமது ஆச்ரம தருமங் கெடுகின்றது! என்ற யோசனையோடு கூடினவராய், "அம்மே! ஒரு திங்கள் காலத்திற்குள் உமது கேள்விகளுக்கு விடைதருவேன்" என்றனர். பாரதியும் உடன்பட்டனர். அவ்வளவோடு பதினெட்டாம் நாளின் பிரசங்கம் முடிந்தது. சபையும் கலைந்தது.

9. உடனே சங்கரர் தம் மாணாக்கர்களோடு யோகப்பயிற்சியால் ஆகாயமார்க்கத்தில் செல்லுகையில், சாயங்கால நேரத்தில் ஒரு நகரத்தைச் சேர்ந்ததோர் பயானத்தில், ஒருபெரு பரத்தடியில் ஒரு பிணத்தையிட்டு பலமாதர்களும் பரிவாரங்களும் அழுதுக் கொண்டிருப்பதைக்கண்டு அதற்கு அப்புறத்திலுள்ள மலைமேலிறங்கி, பிறர் அறியக்கூடாததாயும் யோக சமாதிக்குத் தக்கவுமான குகைகளுள்ள விடத்தில் தங்கியிருக்கையில், சங்கரர், தம் மாணாக்கனாகிய பத்மபாதரைப் பார்த்துக் கூறுகிறார்.

10. "பத்மபாதா! காமசாஸ்திரத்துள் சதுரனாகிய அமரகனென்னும் அரசன் தனது மனைவியர் நூற்றுவரோடு சிங்காரவனம் வந்து, வேட்டைக்குச் சென்றவிடத்தில் வாழ்நாள் முடிந்து விழுந்து இறந்தமையால், அவன் தேகத்தைச் சுற்றிக்கொண்டு அவன் தேவிகள் அம்மரத்தடியில் நிற்கிறார்கள். அவ்வேந்தன் தேகத்தில் நான் புகுந்து, மூர்ச்சித்து எழுந்தாற்போலும் எழுந்து, பட்டணத்தை யடைந்து, அவன் மகனுக்கு இளவரசு மகுடஞ் சூட்டி, அவன் மனைவியருடன் காமக்கலையிற் தேர்ச்சிபெற்று, ஒரு காம நூலையு மியற்றி, மறுபடியும் இங்குவந்து என்னுடலிற் சேரவேண்டுமென்று எண்ணினேன். நான் வருமளவும் நீங்கள் அனைவரும் இந்த உடம்பைக் காத்திருக்க வேண்டும்" என்றனர்.

11. பத்மபாதர் வணங்கி, "பிரபோ! தாமறியாததொன்றில்லை. மாதர் கூட்டுறவு எவ்வகைப்பட்ட வரையும் மீளவிடாது. அன்றியும் தேவரீர் வெளிவிடா விரியமுடைய விரதத்தைக் கெடுத்துக் கொள்ளுவது சந்நியாச தர்மத்திற்கு ஒவ்வாது; அத்தருமத்தை விளக்கும் பொருட்டு விருது பூண்டிருக்கும் உமக்குத் தெரியாததென்ன விருக்கின்றது? ஆயினும் குருபக்தியாற் கூறினேன்: அதைப் பொறுத்து செய்யத் தகுவன செய்தருள்க!" வென்றனன்.

12. ஸ்ரீசங்கரர், "பத்மபாதா! ஓ! மைந்த! சிவயோகமுடைய ஸ்ரீ கண்ணனுக்கு ஆச்சியர் கூட்டுறவு துன்பம் செய்ததில்லை. 'வச்சிரோலி' என்ற யோகவித்தையால் சுக்கிலத்தை வெளிவிடாது காக்கலாம். எண்ணமேயன்றோ இச்சைக்கெல்லாம் வித்து? காமாந்தகனை சிவனுக்குக் காமபயமுண்டோ? பேதநோக்குடையவனுக்கு உலகம் உண்மையாகத் தோன்றுமேயன்றி அத்வைதம் கைவந்தவனுக்கு உலகெல்லாம் பொய்யாயிருக்கையில் துன்பத்திற்கும் இடமெங்கே?

"நூறு அஸ்வமேத வேள்விப்பலனும், பிர்ம ஹத்தி செய்த பாதகமும் ஞானவொளியால் இருவினைச் சம்பந்தத்தையு மடையாது. இருவினைப் பற்றுமில்லாத எமக்கு இவ்வுடம்போடு மன்மத நூற்பயிற்சி செய்தாலும் குற்றமில்லை. ஆயினும் உலகத்தின்பொருட்டு விழுமியோர் ஒழுக்கநெறியைப்பற்றி விரதக் கேடில்லாமல் இவ்வுடம்பினைக் காத்து வைத்து வேற்றுடம்புகொண்டு முயற்சிக்கின்றேன்" என்றலும் மாணுக்கர்கள் உடன்பட்டிருந்தனர்.

13. பின்பு, ஸ்ரீ சங்கரர் தகுந்ததோரிடத்தில் யோக நிலையிலிருந்து பிராணாயாமஞ் செய்து யோகவலியால் வாயுவை கால்பெருவிரல் தொட்டு படிப்படியாய் மேலே யேற்றி பிர்மரந்திர வழியே பேர்த்துக்கொண்டு வெளிப்பட்டு செத்துக் கிடக்கும் அமரகன் உடம்பிற் கலந்தனர். உடனே அவ்வரசன்உடம்பிற் சூடு பிறந்தது. நெஞ்சு துடித்து உதிர ஓட்டமு முண்டாகக் கண்திறந்து கை கால்களை அசைத்துக் கொண்டு மெதுவாக எழுந்தனன்.

14. அரசன் மனைவிகளும் பரிவாரங்களும் சந்தோஷித் தவர்களாய், அரசனை உபசரித்து பயபக்தியோடு நிற்க சூரியோதயமாயிற்று. அரசன் பரிவாரத்தோடு நகர மடைந் திருந்தனன்.

15. அமரக மகாராஜன் நகரம் சேர்ந்தபின், மந்திரி, பிரதானிகளுடன் பட்டத்து யானை மீதேறி ஊர்வலம்வந்து சிங்காசனமேறி சத்தியமும், தர்மமும், உலகவழக்கமும் தவறுதபடி அரசாக்ஷிசெய்து வந்தபடியால், கால நிலையும் தேச நிலைமையும் அதிசீக்கிரத்தில் மாறி சுபிக்ஷம் பரவியதன்றி, அரசன் நடத்தையும் வேறுபட்டுக் காணப்பட்டதை ஸ்திரீகள் அறிந்து மந்திரிக்குத் தெரிவித்தபடியால், இவ்வரச தேகத்துள் யாரோ ஒரு சித்தர் பரகாயப் பிரவேசம் செய்திருக்க வேண்டுமென்று மந்திரிகள் நிச்சயித்து, உடனே அந்நாட்டில் எங்காயினும் சுவாசமற்ற உடம்பு கிடக்கின், அதை அக்கணமே சுட்டொழிக்க வேண்டுமென்று ஏவலாளிகளுக்கு உத்தரவிட்டனர்.

16. அரசாக்ஷியை மேற்கொண்ட பெரியவர் ஆளுகையை அமைச்சர் வசமாக்கி இராஜபத்நியர் நூறு பெயருடன் காமநூல் விதிப்படி இன்ப நுகர்ச்சிக்கு ஆரம்பித்து, அக்காம சாஸ்திரத்தைக் கற்று 'அமரகம்' என்னும் ஓர் நூலைச் செய்து மாதர் போகத்திலிருந்தனர்.

17. மலைமீது சங்கருடம்பைக் காத்திருந்த பத்மபாதர் முதலிய சிஷர்கள், தமது ஆசிரியர் கட்டளைப்படி ஒரு மாதம் வரையில் தேகத்தைக் காத்திருந்து, குருவாராத படியால் மனம் வருந்தி, ஐந்துநாள் வரையில் குருவைப் பிரார்த்தித் திருந்தனர். ஆசிரியர் வாராதபடியால் மனம் தளர்ந்து, இனி செய்யும் காலப்போக்கு ஆபத்துக்கிடமென்று வுன்னி, ஆசிரியரைத் தேடி, இசைப்புலவர் வேடம்பூண்டு வெளிப்பட்டு, முன்னிலைப் புறமொழியாக வண்டுக்கும் யோகிக்குமாகப் பொருள்பட ஓர் செய்யுளையமைத்து, அதில் "தத்வமஸி" என்னும் வேத முடிவைக் காட்டும் பதத்தைப் பொருத்திப் பாடிக்கொண்டு கூட்டமாக அரசனெதிரில் வந்து சேர்ந்தார்கள்.

18. உடனே ஆத்மவுணர்ச்சியடைந்த உத்தமர் அரசன் தேகத்திலுள்ள தமது சூக்ஷ்ம தேகத்தை வெளிப்படுத்திக் கொண்டுசெல்ல,

அரசதேகம் மூர்ச்சைபடைந்து கீழே விழுந்தது. அரண்மனையில் கூக்குரலுண்டாயிற்று. வந்த புலவர்களாகிய மாணுக்கர்களும் வந்தவழியே திரும்பினர்.

19. இதனடுவே, மந்திரியின் ஏவலர்கள் மலைமீதிருந்த சங்கரர் தேகத்தை தீமூட்டிச்செல்ல, அது எரிந்துக்கொண்டிருந்தது. உடனே ஸ்ரீ சங்கரர் நரசிங்கஸ்தோத்திரத்தைச் செய்தலும், ஜுவாலை தணிய உடம்பிற் புகுந்து "கராவலம்பம்" என்னும் ஸ்தோத்திரத்தைச் செய்தனர். உடனே சங்கரர் மேனி திவ்விய தேஜசோடு விளங்கியது. மாணுக்கர்களும் வந்து சேர்ந்தனர். அவர்களை யாதரணைசெய்து அழைத்துக்கொண்டு மண்டனபண்டிதர் மனையை அடைந்தனர்.

20. அப்பொழுது மண்டனர் ஸ்ரீ சங்காருக்கு அருக்கியம் முதலிய கொடுத்து வணங்கி நின்றனர். உபயபாரதியாரும் வந்து, அமரகாஜன் யாக்கையில் சங்கரர் நடத்திய விருத்தாந்தங்களை யுணர்ந்தவராய் சாமவேத கானத்தில் ஸ்துதித்தனர்.

21. அச்சமயத்தில் ஸ்ரீசங்கராருடைய மந்திரமகிமையால் 'அமரகம்' என்றநூல் அச்சபையின் கண்ணே விழுந்தது. அதனை அங்கிருந்தவரெல்லாம் கண்டு வியப்படைந்து அதில் உபயபாரதியார் கேள்விகளுக்கெல்லாம் விடையையுணர்ந்து மகிழ்ந்தனர்.

22. உபயபாரதியார் சங்கரருக்கு முழு வெற்றியைக் கூறினர்.

23. உடனே சரஸ்வதி தனது லோகத்திற்குச் செல்ல முயன்றதை நோக்கி சங்கரர் "ஞான சாரஸ்வதார்" என்னும் ஸ்தோத்திரத்தால் ஸ்துதிக்க, அவ்வன்னை 'நீர்வேண்டுவதென்ன?' வென்று வினவ, சங்கரர், நான் எந்த ஸ்தலத்தில் இயந்திரஸ்தாபனஞ் செய்கிறேனே அவ்விடத்தில் இலக்ஷ்மி, பார்வதி, சரஸ்வதி என்னும் வடிவோடு வீற்றிருந்து அருள்புரிய வேண்டுமென வேண்டலும், அங்ஙனமே யாகுகவென்றுகூறி மறைந்தனர்.

24. பின்பு மண்டனபண்டிதர் விதிப்படி சந்நியாசத்தைப் பெற்றனர். சங்கரர் அவருக்கு வேதாந்த வுண்மைகளையும் அத்வைதத்தையும் உபதேசித்தனர். இவருக்கு சுரேஸ்வராசாரியார் எனப் பெயரிடப்பட்டு மாணுக்கருட் தலைவராயினர். இவருக்கு மாணுக்கர்களாயிருந்த அநேகர் அத்வைதத்தை விரும்பி ஸ்ரீசங்கரரை சரணமடைந்தனர். இச்செய்தி யுலகெங்கும் பரவியது.

25. ஸ்ரீசங்கரர் தம்மாணுக்கருடன் ஸ்ரீசைலத்தை யடைந்து பாதாள கங்கையில் முழுகி மல்லிகார்ச்சுனரையும், பிர்ம்மராம்பிகையையும் தரிசித்து "சிகரகலாயந்திரப்" பிரதிஷ்டை செய்து, 'சத்பமதத்வைதம்' என்ற வாக்கியத்தை மல்லிகார்ச்சுன லிங்கத்தினிடத்துமூன்று முறை தோற்றுவித்து, பலருக்கும் ஞானமார்க்கத்லதை உபதேசித்தங்கிருந்தனர்.

T. C. வேங்கடரமணய்யர்.

———:-:———

## The Redemption of the Miser.—A Short Story.

## தனலோபி தர்மரக்ஷை.

———:(*):———

ஓர் சிறு கதை.

துலாராசி மஹத்துவம்.

ஒர் ஊரில் தனலோபி செட்டி என்னும் ஒரு ரத்தினவியாபாரி இருந்தான். அவன் தாய் தந்தையர் அவனுக்கு வைத்த பெயர் தனபால செட்டி. ஆனல் தனபாலசெட்டி மஹா லோபியாயிருந்ததனல் ஊர் ஜனங்கள் தனபாலன் என்பதை 'தனலோபி' என்று திரிபுச்சொல்லாக மாற்றினர்கள். இனிமேல் நாமும் தனலாப செட்டியை அவன் பட்டப் பெயராகிய 'தனலோபி' என்றே கூப்பிடுவோம். தனலோபி

செட்டி ரத்தினத்தில் வியாபாரஞ்செய்து நிறையப் பணம் சேர்த்திருந்தான். இந்த தனலோபி செட்டி அவ்வூரில் பணத்தில் பெருத்தவனும், லோபத்தனத்தில் மிஞ்சினவனுமாயிருந்தான். தனலோபி செட்டியின் உயிரெல்லாம் அவன் பணத்தில் இருந்தது. இராத்திரியில் வெகுநேரமானபின்பு படுக்கைக்குப் போகுமுன் தன் பணப் பெட்டியைத் திறந்து தான் சேர்த்துவைத்திருக்கும் பணத்தை யெல்லாம் தன் கண்ணாரப் பார்வையிட்டு மனம் பூரித்துப் போவான். இவன் ஒருநாள் ராத்திரி வழக்கம் போல் தன் பணத்தைப் பார்த்து மனம் பூரித்திருக்கும் பொழுது அவன் தனக்கு "பிச்சைக்காரருக்கும் ஏழைகளுக்கும் தம்பிடிகூடக் கொடாதுபணம் சேர்ப்பதிலேயே கண்ணாயிருந்தது பாவமென்றும் அந்தப்பாவத்தைச் செய்த பாபிகள் அவர்கள் மரணத்துக்குப் பிறகு மிகுந்த கஷ்டப்படுவார்கள்" என்றும் பட்டது. நாம் அந்தப் பாவத்தைச் செய்தோமே! அதற்கு என்ன பிராயச்சித்தம்செய்தால் அது போகும்! என்று அவன் ஆலோசனை செய்துகொண்டிருக்கும் பொழுது வாசல்கதவை பிடிக்கும் சப்தம் அவன்காதில் விழுந்தது. ஆனால் அது வெளியோசையாகவின்றி உள்ளோசையாக விருந்ததால் அதைக்கேட்டு அவன் திடுக்கிட்டுப் போனான். கடைசியில் மனதைத் தேற்றிக்கொண்டு மனோராஜ்யம்செய்ய, மறுபடியும் கதவைபிடிக்கக்கேட்டு வாசற்கதவைத் திறந்தான். கதவைத் திறந்ததும் அங்கே அவன்பக்கத்துவீட்டுக்கார னிருந்தான். அவன் பரம ஏழை. அவன் வறுமைக்கேற்க அவனுக்கு பன்னிரண்டு குழந்தைகள் இருந்தன. அக் குழந்தைகளைப் போஷிக்க அவன் அன்றைக்குக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்தபணம் போதாதிருந்ததால் அவன் ஒரு ரூபாய் பக்கத்து வீட்டு லோபியினிடமிருந்து கடன்வாங்கிக்கொண்டு போக வந்திருந்தான். அந்த லோபி யாருக்கும் தம்பிடிகூடக் கொடுக்கமாட்டானென்று அவனுக்குத் தெரிந்திருந்தும் வறுமையின் கொடுமையைச் சகிக்கமுடியாமல் ஒருவேளை பகவத் கிருபையினாலாவது லோபி மனம்இரங்கிக் கொடுக்க மாட்டானா! என்று வந்திருந்தான். அவன் லோபியை ஒரு ரூபாய் கடன் கேட்டதும், லோபி ஒரு மணிநேரம் சும்மாயிருந்துவிட்டு பிறகு தீர்க்க தொனியோடு "நான் உனக்கு ஒரு ரூபாயைத் தருகிறேன். அதைக் கடனாகக் கொடுக்கமாட்டேன். நான் இறந்து போனபிறகு நீ யென் சவக்குழியை மூன்று ராத்திரி முழிவிழித்துக் காவல் காப்பதாக வாக்களித்தாயானால் நான் அதை உனக்கே கொடுத்துவிடுகிறேன்" என்றான். தனலோபி செட்டியின் த்வனியைக் கேட்ட பக்கத்து வீட்டுக்காரனுக்கு அந்த லோபி அவன் எண்ணப்படியே சீக்கிரத்தில் இறந்து போவானென்று பட்டது. ஆதலால் அந்தலோபியின் சவக்குழியைக் காக்க உடன்படுவதற்கஞ்சினான். ஆயினும் வறுமையின் கொடுமையால் அந்தப் பரமஏழை அவன் சவக்குழியை முதல் மூன்றுராத்திரி பாதுகாப்பதாக வாக்களித்துவிட்டு ரூபாயை வாங்கிக்கொண்டுபோனான். சூரியபகவான் அப்பொழுதிருந்த கன்னியாராசி விட்டுத் துலாராசியில்போய்ச் சேரவும் தனலோபிசெட்டி திடீரென்று இறந்துபோனான். பக்கத்துவீட்டுக்காரன் தான் சொன்னபடி அவன் இறந்த அன்று ராத்திரி அவன் புதைக்கப்பட்டிருந்த சவக்குழியிடம் போய் சூரியோதயம்வரைக் கண்விழித்துக் காத்திருந்தான். அன்றையதினம் இரவில் பூதங்கள் நடமாடினது அவன் கண்ணுக்குத் தெரியவில்லையால் அவன் "இந்த ராத்திரிக்குப் பிழைத்தோ" மென்று சூரியனை நமஸ்கரித்து விட்டுசென்றான். இரண்டாவது இராத்திரியும் விசேஷமாக ஒன்றும் காணவில்லை. ஏனெனில் அவன்மனத் தூய்மையைக்கண்டு பிரேதங்கள் ஓடிவிட்டன. மூன்றாவது ராத்திரி அவன் அங்குபோன பொழுது அவனுக்குள் அவன்

மனது படபடவென்று துடித்து அடித்துக்கொண்டது. அன்று பைசாசலோகவாசிகளுடைய திருநாள்: நரமனிதரைப் பக்ஷிக்கும் சுபாவமுள்ள வேதாளங்கள் நடமாடும் நாள். அவன் கடவுளையே நம்பியிருந்தான். நடுநிசியாகும் சமயத்தில் பகவான் ஒரு யுத்தவீரனாக அந்தப் பக்கம் வந்தார். அந்தவீரன் கல்லறையண்டை வந்து அங்கு ஒருவன் காவல்காப்பதுபோல்உட்கார்ந்துகொண்டிருப்பதுகண்டு அவன் கிட்டப்போய் "நீ ஏன் இங்கு உட்கார்ந்துகொண்டிருக்கிறாய்?' என்று கேட்டான். அதற்கு அங்கே உட்கார்ந்துக்கொண்டிருந்த பரமஏழை நான் தனலோபி செட்டிக்கு அவன் கல்லறையை மூன்றுராத்திரி காவல் காப்பதாக வாக்களித்து ஒருரூபாய் அவனிடமிருந்துவாங்கிக்கொண்டேன். என்வாக்குப்படி இரண்டுராத்திரிகாவல்காத்தேன். இன்றைய ராத்திரியையும்இங்கே கழித்துவிட்டால் என் வேலை முடிந்தது. நீயும் எனக்குத் துணையாயிருக்கிறாயா?' என்றான். அதற்கு அந்த யுத்த வீரன் காவல் காப்பதும் சண்டைபோடுவதும் எனது தொழிலாயிருப்பதால் உனக்கு ஒத்தாசையாகக் காவல் காப்பதற்கு எனக்கு இஷ்டந்தான் என்றான். பிறகு இவ்விருவரும் அங்கு உட்கார்ந்து கொண்டிருக்கையில் சூரியோதயத்திற்கு ஒருமணிநேரமிருக்கும்பொழுது திடீரென்று ஒரு வேதாளம் அந்தசமாதியருகில் தோன்றிற்று. அந்த வேதாளம் இவர்களைப்பார்த்து இந்தசமாதியில் புதைக்கப்பட்டிருக்கும் சிவன் என்னைச் சேர்ந்தவன். நீங்கள் இவ்விடத்தைவிட்டு உடனே போய்விடுங்கள் என்றது. அதற்கு யுத்தவீரன் "நீ எங்களை யாரென்று நினைத்துக் கொண்டாய்! நீ அந்த மனிதனுக்காக எங்களுக்கு ஏதாவது பணம் கொடாவிட்டால் உன்னை நாங்கள் லேசில் விடோம்" என்றான். உடனே அந்த வேதாளம் பயந்து "உங்களுக்கு எவ்வளவு கொடுத்தால் திருப்தி அடைவீர்கள்?" என்று கேட்டது. அதற்கு அந்த யுத்தவீரன் அடியில்லாத ஒரு ஓட்டைக் கோணியைக் காண்பித்து அது நிறையக் கொடுத்தால் போதுமென்றான். "சரி" யென்று ஒப்புக்கொண்டு, அந்தவேதாளம் அவ்விடத்தைவிட்டு வெகு விரைவாகப்போய் ஒரு பெரிய சோணிநிறைய தங்கநாணயங்களை வாரிக்கொண்டு வந்துசேர்ந்தது. யுத்தவீரன் அந்த ஓட்டைக் கோணியை ஒரு பள்ளத்திற்கு நேராகப் பிடித்துக்கொண்டு அந்த வேதாளம் கொண்டுவந்த நாணயங்களையெல்லாம் அதில் கொட்டினான். அடியில் ஓட்டையும் அதன் கீழ் பள்ளமுமிருந்ததால் அந்தக் கோணி சிறிதும் நிறையவில்லை. அதுகண்டு அந்த வேதாளம் வெகு வேகமாய்ப் போய் பூதகணங்களோடு முன் கொண்டுவந்ததை விடப் பலமடங்கு ஜாஸ்திப் பணம் கொண்டுவந்தது. இந்தத் தடவையும் கோணி நிரம்பவில்லை. வேதாளம் இப்பொழுது கோணிக்குள் எட்டிப்பார்த்து மிகுந்த கோபமடைந்து யுத்தவீரனை அறையப் போயிற்று. ஆனால் அவன் அதற்கு அஞ்சுவதாயில்லை. இருவரும் வாக்குவாதம் செய்துக்கொண்டிருக்கையில் சூரியோதயமாகிவிட்டது. வேதாளம் பணமிழந்ததோடு தன் இரையையுமிழந்து ஓடிப்போகவேண்டியதாயிற்று. பாபிகள் இறந்தால் அவர்கள் உயிர்போன மூன்று நாள் வரையில் அவர்கள் பூதப்பிரேத பைசாசலோகங்களில் வாசம் செய்வார்களாதலால் அப்பொழுது அவர்கள் ஆத்மா அந்த லோகங்களைத்தாண்டிப் போகச் சக்தியற்றுப் போகின்றனவென்று சொல்லுவர்.

அந்த ஆபத்தைத் தாண்டிப் போவதற்காகவே அபரக்கிரியைகளும் உத்தரக் கிரியைகளும் ஏற்பட்டுள்ளன. தனலோபி தன் ஆயுளில் ஒரு காசுகூட தர்மத்துக்குக் கொடுக்காவிட்டாலும், அசரீரிக்கு பயந்து அந்தப் பரமஏழையான குடியானவனுக்கு ஆபத்து வேளையில் ஒரு ரூபா கொடுத்துதவியதனால், அவன் பூதப்பிரேத லோகசஞ்சார காலத்தில் அவைகளால் பிடிக்கப்படாது தப்பினதுமன்றி மூன்றாவதான பைசாசலோகத்தில் அவனைப் பிடிக்க

வந்த வேதாளத்துக்கு மிரையாகாது தெய்வ கிருபையால் தப்பிப் பிழைத்தான். இந்தக் கதையின் உள்ளர்த்தம் துலாகாவேரி மஹாத்மியத்தில் பார்க்கக் காணலாம்.

அற்பசிமீ துலாராசியில் சூரியன் பிரவேசிக்கும் காலம். இது தேவர்களுக்கு உதயகாலமாதலால் மஹா புண்யகாலமாம். இந்த துலா மாசத்தில் உதயகாலத்தி லெழுந்து தினந்தோறுங் காவேரியில் அல்லது புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநம்செய்து கடைசி தினமாகிய கடைமுகத்தன்று நதிசங்கமங்களில் ஸ்நாநம் செய்கிறவர்கள் அவர்களுடைய பாபங்களெல்லாம் ஒழிந்து பூதப்பிரேத பைசாசங்களின் பயமின்றி நல்வாழ் வெய்துவார்கள். இந்த துலாமாசத்தில் பகவான் ஒரு பதிவிருதையி னிமித்தம் அவள் புருஷனாகிய மாஹா லோபியைக் கடையேற்றும் பொருட்டு அவன் ஒரு தம்பிடிக்குப் பிராணனைவிடத் துணிந்தும் அவனைவிடாமல், அவனிடமிருந்து ஒரு தம்பிடி காசு யாசகம்கேட்டு அதற்கு அவன் ஒப்ப அந்தக் காசை விடாது தண்டி அவனுக்கு அவன் பத்நியோடு ஸாலோக பதவி யளித்தாரென்பது புராண ஐதிகம்.

—:-:—

## Easy Lessons in Economics.

### Lesson XIII.

### குடிவாழ்க்கை.

—:o:—

### 13—ம் பாடம்

### முதலாளியின் கஷ்டம்.

தொழிலை நடத்தும் முதலாளிகளுக்கு அதைக்குறைவற நடத்துவதில் பலவிதமாய்க் கஷ்டங்கள் நேருவது சகஜம். தொழிலாளிகளைக் கொண்டே முதலாளிவேலையை நடத்தவேண்டுமாகையால், தொழிலாளிகள் தொழிலைச் சரிவர நடத்தும்படி அதிக விழிப்புடன் பாதுகாத்தல் எளிதான காரியமன்று. தினக்கூலி கொடுத்து வேலையை நடத்துவோமென்றால் வேலை சரிவர நடவாது. இன்று வேலைக்குவந்து தொழிலை நடத்துகிறவன் நாளைக்கும் வருவானென்பது நிச்சயமில்லை. தினந்தோறும் செய்யப்பட்ட வேலைக்குத் தக்க கூலியைக் கொடுத்து தொழிலை நடத்துவோமென்றால், வேலையை அறைகுறையாகச்செய்து தனது கூலியைப் பெற்றுக்கொண்டு, பொருளைக் கெடுத்து, வாங்குவோருடைய மனஸ்தாபத்தை யுண்டாக்கி முதலாளிக்கு நஷ்டமுண்டாகும்படி தொழிலாளிகள் செய்யக்கூடும். இவ்விதம் தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் விரோதம் உற்பத்தியாவது வெகு எளிது. முதலாளி இலாபமுழுவதையும் கைப்பற்றுகிறானே யென்று வேலைக்காரர்கள் பொறாமைப்படுவார்கள். தாங்கள் செய்யும் வேலையின்பயனை யடைக்கிறானென்று, அவன் சுகித்திருப்பதையும், தாங்கள் அவ்வளவு சுகமின்றி யிருப்பதையும் பார்த்து சகியார்கள். தன்கையிலுள்ளமுதலை தொழிற்சாலையிலும், யந்திரங்களிலும், பண்டங்களிலும், கூலியிலும் செலவிட்டு, எக்காலத்தில் எவ்வித நஷ்டமுண்டாகுமோ வென்று ஏக்கமுற்று, தான்கற்ற கல்வியறிவையும் காலத்தையும் தொழிலில் செலவிட்டு நிற்கும் முதலாளியின் நிலையையுங் கஷ்டத்தை யுமறியாமல் தொழில்செய்வோர் அவன் வண்டிகளின் பேரிலும் குதிரைகளின் பேரிலும் ஏறிக்கொண்டுபோவ தொன்றையே பார்த்து அவனை வெறுப்பார்கள்.

இந்தக் கஷ்டத்தை நீக்க பலவிதஉபாயங்களை நாகரீகமடைந்த தேசத்தார் செய்துவருகிறார்கள். வேலை சரிவர நடத்தும்பொருட்டு, வேலைக்குத்தக்கபடி கூலிகொடுப்பதிலுள்ள கெடுதியை ஏற்கனவே கூறியுள்ளோம். சிலமுதலாளிகள் வேலைக்காரர்களுக்கு நாள் அல்லது மாதத்திற்கு இவ்வளவு சம்பளமென்று அவனுடைய குடும்பச்செலவுக்குப் போதுமான அளவுகொடு

த்துவிட்டு, மொத்தமாக வருஷத்தில் கிடைக்கிற இலாபத்தில், முதலாளி போட்டிருக்கிற முதலுக்கு வட்டிக்காகவும், முதலாளியின் மேற்பார்வை சிரமத்திற்காகவும், தொழிற்சாலை யந்திரம் முதலியவற்றின் தேய்வு கழிவு முதலிய காரணங்களினால் நேரிடும் செலவுகளுக்காகவும், இதுபோன்ற மற்றச்செலவுகளுக்காகவும் ஈடுசெய்ததுபோக, பாக்கியுள்ளதில் முதலாளிக்கு இவ்வளவு பாகமென்றும், தொழிலாளிகளில் இன்னின்னாருக்கு இவ்வளவு பாகமென்றும் ஏற்படுத்திக்கொண்டு தொழிலை நடத்துவதுண்டு. இப்படிச் செய்வதில் தொழில் செய்கிறவனும் கிடைக்கும் இலாபத்தில் பங்குபெறுகிறவனாதலால், தொழிலினாலுண்டாக்கப்படும் பொருளைக் கெடுக்கவும், காலத்தை வீணாக்கவும் துணியமாட்டானென்பதில் என்ன தடை?

இதைவிட தொழில் குறைவற நடப்பதற்கு வேறொருவழியுமுண்டு. தொழிலாளிகளை ஒவ்வொருவரும் சொற்ப முதல்போட்டு கட்டுப்பாடாகத் தொழிலை செய்து, குடும்பச்செலவுக்கு அவசியமான தொகையைப்பெற்று, குடும்பங்களில் தற்செயலாய் ஏற்படும் அவசியமான செலவுகளைப் பொது இலாபத்திலிருந்து செய்து தொழிலை நடத்துவது.

பிரான்ஸின் தலைமை நகரமாகிய பாரிஸ்ஸில் இவ்விதமான தொழிற்சங்கங்கள் பலவிருக்கின்றன. 1848-ம் வருஷத்தில் கட்டடவேலை செய்கிற கொத்தன்களுக்குள் ஓர் சங்கமேற்பட்டது. அதில் சேர்ந்தது எண்பத்தைந்துபேர். அவர்களுக்கு கையாள்கள் முன்னூறுமுதல் நானூறுவரையிலுண்டு. கட்டடசம்பந்தமான அறிவுபோதுமான வரையிலுள்ள ஒருவனை கட்டட மேற்பார்வையின் பொருட்டும், வரவு செலவுகளைப் பார்க்கசக்தியுள்ள மற்றொருவனை, கணக்குப் பரிசோதனையின் பொருட்டும் மேஸ்திரிகளாக்கினர். இவர்கள் இருவரும் தங்கள் வேலையில் திறமை வாய்ந்தவர்களென்று பேர்பெற்றவர்களாயினும் மிதமான சம்பளத்திற்கே வேலை செய்து வந்தனர். சிறிது காலத்தில் இவர்களுக்குள் காரிய நிர்வாகத்தின் பொருட்டு ஒரு சிறிய கமிட்டியும் ஏற்பட்டது. இக்கமிட்டி மெம்பர்களும் மற்றவர்களும் தினந்தோறும் மாலை ஆறுமணிக்குமேல் ஓரிடத்தில் கூடி அன்று நடத்தின வேலையைப்பற்றியும் மறுநாள் நடக்க வேண்டிய தொழிலைப்பற்றியும் பேசி முடிவு செய்வார்கள். தங்களுக்குள் யாராவது நோயால் வருந்தினால் அவர்களைக்கவனித்து ஔஷதங்கள் கொடுக்கும் பொருட்டு ஒரு வைத்தியனை நியமித்துக் கொண்டதன்றி, நோயாளியின் குடும்பத்திற்குப் பொதுவிலிருந்து கொடுத்து உதவினார்கள். அந்திகாலத்திலும் ஒழிவு நாளிலும் பொழுது போக்கும்பொருட்டு, ஒரு சிங்காரவனமும் சிலப்பக்கூடமும் ஏற்படுத்தினார்கள். தங்கள் பிள்ளைகளும் பெண்களும் கல்விகற்கும் பொருட்டு பொதுப்பணத்திலிருந்து ஒரு பாடசாலையையும் ஸ்தாபித்தனர். இவர்கள் ஒன்றுசேர்ந்து தொழிலைச் செய்வதற்கு ஏற்படுமுன் உடுக்கத் தகுந்த வஸ்திரமின்றிவருந்தினர். இப்பொழுதோ அவர்களுக்கு அவ்விதமான குறைவு யாதொன்றுமில்லை. கூட்டுத்தொழில் ஏற்படுவதற்கு முன் சுமார் ஐந்நூறுபேர் கொண்ட ஓர் சமூகத்தில் ஐந்நூறுபேர் அதிக வரும்படி பெற்று சுகமாயும் திருப்தியாயும் காலங்கழித்தனர். இருபதுபேர் தங்கள் குடும்பவிதச் செலவுக்குத் தகுந்த வருமானத்தைப் பெற்று ஒருவாறு காலக்ஷேபஞ் செய்தனர், மற்றவர்கள் உண்ண உணவுக்கும், கட்டத்துணிக்கும் வருந்தி வந்தனர்.

அடியில்வரும் கணக்கிலிருந்து அவர்கள் செல்வம் பெருகின விவரம் விளங்கும்.

| வருஷம். | செய்தவேலையின் மதிப்பு. | இலாபம். |
|---|---|---|
| | பிராங்கு. | பிராங்கு. |
| 1852 | 45,530 | 1,000 |
| 1853 | 2,97,208 | 7,000 |
| 1854 | 3,44,240 | 20,000 |
| 1856 | 9,98,240 | 86,000 |
| 1858 | 12,31,461 | 1,30,000 |
| 1860 | 24,53,800 | 2,18,000 |

(பிராங்கு என்பது ஏறக்குறைய அரைரூபாய்.) இவர்களில் முந்தி 500 க்கு 5 பேர் சுகமாகவும் திருப்தியாகவும் வாழ்ந்து வந்ததுபோல், அவர்களுடைய ஒவ்வொரு குடும்பமும் யாதொரு குறைவுமின்றி இப்பொழுது வாழ்ந்து வருகிறார்கள். இவ்வித சங்கத்தாருடைய சரித்திரத்தைப்பற்றி எழுதப் புகுந்தால் பெருகுமென்றஞ்சி விடுக்கின்றோம்.

T. C. வேங்கடரமணய்யர்.

———:*:———

## ஸ்கந்தர்சஷ்டி-திருமந்திரம்

——:(o):——

இந்தியாவின் புராதனமான நித்திய லக்ஷியங்கள்.

"ஆவையும் பாவையும் மற்றவுறவோரையும்
தேவர்கள் போற்றுந் திருவேடத்தாரையும்
காவலன் காப்பவன் காவாதொழிவனேல்
மேவு மறுமைக்கு மீளாநரகமே."—இராஜதோஷம்.

அடியார் பெருமை.

"சிவயோக ஞானி செறிந்தவத்தேசம்
அவயோகமின்றி யறிவோருண்டாகும்
நவயோகங் கைகூடும் நல்லியலுண்டாகும்
பவயோகமின்றிப் பரலோகமாமே."
—திருமந்திரம்.

———:o:———

## India's Ancient and Eternal Ideals.

(After St. Tirumoolar.)

### I. The Supreme Duty of Sovereign Defined.

He alone is Sovereign-lord on earth who in saving grace [protects
The producers of wealth, the producing land and others [who in products deal
As also those whom Devas praise for open life of Renun- [ciation lived!
He who in this his sovereign-duty fails, to eternal hell [is doomed be sure!

### II. The Influence Great of Servants of God.

The land where dwelleth the man of God who to [Oneness with Him hath reached
There dissensions cease and men of knowledge increase!
The ninefold Universe in atonement is felt as Nature's [bounty increasing flows
And Illusion's sway in heart falls off producing the har- [mony of heaven on earth.

Ananda Mission, Lalitalaya, Madras, *Skandar-Sashti.* } C. V. SWAMINATHAIYAR.

† Symbolised by the comprehensive terms the Cow, the soil and those related to it otherwise in the line.
"ஆவையும், பாவையும், மற்றவுறவோரையும்."

# THE KARTIKAI FESTIVAL.

## கார்த்திகைத் திருவிழா.

——:(*):——

### குமாரஸம்பவம்.

பல்லவி.

குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
ஸாம்பவ குமாரன் பிறந்தான்.

சரணங்கள்.

1. பட்டதோர் பாடெல்லாம் விட்டதோர் கனவெனச்
சட்டமதாகவே யிட்டரைக் காக்கவென்—றிதய
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

2. பரணியில்[1] மூழ்கிய கார்த்திகை மாதர்கள்
தரணியில் கர்ப்பம் தாங்கிவளர்—செல்வக்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

3. அசுவினி தேவர்கள் அஹம்புற மாகவே
விசுவமெ லாம்புகழ் வித்தைகள்—போற்றுமக்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ. —(குமாரன்)

4. பூமியில் வந்தவன் பௌமிய னுகவே[2]
பூமியில் நொந்தவர் குறையெலாம்—போக்குவன்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

---

(1) பரணிக்கு அதிதேவதை ஸம்ஹார சக்தியாகிய துர்காதேவி-ஆகவே 'மஹாப்ரளய மடுவாகிய சரவணப் பொய்கையில் மூழ்கி'யென்று கூடார்த்தம் செய்து கொள்க.

(2) பூமிகாரகனுகிய அங்காரகனுகி (யுத்தவீரனுகி).

5. தசமூதிபூரண மாகவே மூன்றாள காளையில்
வசமதியச்வினி யோடுற வாடவேசாக்திப்—த்தி[3]
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

6. அறிதுயி லமர்ந்தவ னுருடங் தேர்ந்தவன்
[4] தறியிடு மாந்தர்தந் துன்பந்தீர்—தூய
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

7. குகையி லுதித்தவன் புகைவழி போகான்
பகையிலி பத்தர்தம் மிதயத்துறை—செல்வக்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்! —(குமாரன்)

8. சூரனைச் சம்ஹரித்துச் சுகமளித்த விரனவன்
பேரினைக் கொண்டுநாம் பிழைக்குவழி—காட்டவல்ல,
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

9. சாந்தாநந்த ஸாஸ்வதிதேவி மோன முத்ரி
காந்தாநந்த காருணீமாத்ர ஸம்யுக்த—[5]ஸ்ரீ
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

10. பஞ்சத சாக்ஷரீ பால்வண்ணத் தாயவள்
நஞ்சுண்ட கண்டற்கு நாயகி—யாமவள்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம்!—ஸ்ரீ —(குமாரன்)

(3) கௌரிதேவியார்.

(4) காலத்தறி.

(5) சாந்தாநந்த ஸரஸ்வதி தேவியினுடைய மோனமுத்ரிகையாகிய ஈரதகடியின் அர்த்தத்தில் (முடிவிலுள்ள மோனநீத) சச்சிதாகர்தப் பொருளாய் கருணைசக்தியே உருவெடுத்த வேலாயுதத்தோடுகூடிய (ஸ்ரீகுமாரன்) என்றபடி.

11. ஸ்ரீகரன் செய்பூஜைக் குவர்தமுன் னாளிலே
ஸ்ரீதரன் அவதாரம் செய்கூத்தைக்—காட்டிய
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம் !—ஸ்ரீ —(குமாரன்)

12. ஸ்ரீகர னுக்கன்று ஸ்ரீதரன் செய்கூத்தை
ஸ்ரீதா னாகவே ஸ்ரீபுரத்தாடிய—வற்புதக்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம் !—ஸ்ரீ —(குமாரன்)

13. கார்த்திகை மதியில் கர்க்கடகச் சந்திரந்த—யமர்
னார்மழை பொழிய அருமேவுருவா—யமர்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம் !—ஸ்ரீ —(குமாரன்)

14. குமாரன் பிறந்தான் கூர்மதி மேஷத்திற்
குமார-கிருஷ்ணன் கூர்நாமந்—தரிக்கக்
குமாரன் பிறந்தான் வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம் !—ஸ்ரீ —(குமாரன்)

15. அருணாச லேசுவரர் அநுக்ரகத் தாலவர்
கருணாச லம்பொங்கு கார்த்திகைமதியில்—மன்னு
குமாரன் பிறந்தான், வாரீர் தேவர்களே
குமாரஸம்பவங் கொண்டா டுவோம் !—ஸ்ரீ —(குமாரன்)

த்ரிதசிஸ்துதி.

"ஓம் சிவபவ நமசிவ சிவயவசீம்
ஐம் சரவண பவயுவ—ஸகலவசீம்
க்ஷீம் டாகல ஸஹபள ஸௌலக்ஷ்மீம்
ஓம் சிவாய நமச்சிவாய—ஓம்
சரவண பவயுவ ஸகலவசீம் நமோ
நாரா யணாய நமோஸ்துதே!"

கார்த்திகைத்திருநாள், ஆதிவாரம்,
1912ஞு நவம்பர்மீ 24உ

## SHORT STORY.
## KING JAYASEN.
### ஜயசேன ராஜன் கதை.

:o:

முன்னொரு காலத்தில் யவனதேசத்தில் ஜயரதன் என்றொரு அரசனிருந்தான். அவன் ஒரு சமயத்தில் மிகவும் மானக்கேடான காரியம் ஒன்றைச் செய்துவிட்டான். அதை ஜயசேனன் என்ற ஒரு சிற்றரசன் சிறு பிள்ளைத்தனத்தால் வெளிப்படுத்தி விட்டான். ஜயசேனன் என்பவன் காந்தார தேசத்து சிற்றரசன்; அன்றியும் ஜயரதன் என்னும் யவனதேசத்து அரசன் கையின்கீழ் இருப்பவன். ஆயினும் அவன் அறியாமைத் தனத்தால் ஜயரதன் செய்த கெட்ட செய்கையை வெளிப்படுத்தித் தனது யஜமானன் கோபத்துக்கு உள்ளானான். இவனையும் இவன் நாட்டையும் கெடுத்துவிட ஜயரதன் தன்னால் கூடியவளவும் முயன்று வந்தான். இதை ஜயசேனன் அறிந்து, இனி நாம் இங்கிருந்தால் நமக்கும் நமது தேசத்திற்கும் கேடு நேரிடுமென்றெண்ணி தனது மந்திரியாகிய சுசிலன் என்பவனைக் காந்தாரதேசத்தை ஆண்டுவரும்படி நியமித்துவிட்டு தான் ஜயரதன் கோபம் தீருமளவும் யவன தேசத்தில் வருவதில்லையென்று மந்திரியினிடம் சொல்லித் தேச சஞ்சாரமாய்ப் புறப்பட்டுப் போயினான்.

இவன் தேச சஞ்சாரம் பண்ணத்தொடங்கி முதல் முதல் கூர்ஜரம் என்கிற தேசம்போய்ச் சேர்ந்தான். வெகுநாளாய் மழையில்லாமற் போகவே அந்த நாடு முழுவதும் பஞ்சத்தால் துன்பப் பட்டுக்கொண்டிருந்தது இதை முந்தியே ஜனங்களால் கேட்டறிந்த ஜயசேனன் பஞ்சத்தால் வருந்தும் மனிதர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று கூர்ஜர தேசத்திற்கு சாமான்கள் கொண்டுபோனான். இவன் அங்கேபோய்ச் சேருங்காலமானது பஞ்சத்தின் கொடுமையைப் பொறுக்க மாட்டாமல் ஜனங்கள் சாகும் காலமாயிருந்தது. அவர்கள் உயிரைக் காப்பாற்ற வேண்டிய சாமான்களுடன் இவன் அங்குவந்து சேரவே ஈசுவரனே தான் மனமிரங்கிப் பஞ்சத்தால் வருந்தும் மனிதர்களை ரக்ஷிக்கும்பொருட்டு ஜயசேனனை அனுப்பினாரோ என்று அந்த ஊராரெல்லாரும் எண்ணினார்கள். அந்த கூர்ஜர தேசத்து நாயகன் குணசீலன் என்னும் ஒருவன். அவன் ஜயசேனனைத் தன் ஜனங்களைக் காப்பாற்றவந்த தெய்வமாக எண்ணினான். இப்படி இவன் அங்கே போயிருக்கும் பொழுது இவனுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் இவன் இங்கிருப்பது ஜயரதனுக்குத் தெரிந்துவிட்டதாகவும் சீக்கிரம் கூர்ஜர தேசத்தைவிட்டுப் போகாவிடில் அவன் கொலைபாளிகளை யனுப்பிக் கொன்றுவிடுவானென்றும் கண்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவ்வூராரிடம் விடைபெற்றுக்கொண்டு வேறு எங்கேயாவது போகலாமென்று ஜயசேனன் அவ்விடம் விட்டுக் கப்பலேறினான்.

இவன் கப்பலில் ஏறின சில நாளைக்கெல்லாம் ஒரு பெரும் புசலடித்து இவன் கப்பலை உடைத்துவிட்டது. எல்லாரும் நடுச் சமுத்திரத்தில் மாண்டுபோனார்கள். ஜயசேனன் மட்டும் கடவுள் அளித்த ஆயுள் மிகுதியினால் மாண்டுபோகாமல் அலையில் தடுமாறிக்கொண்டு கௌபீனங்கூட இல்லாதவனாக ஒருதீவில் கரையேறினான். அங்கு இவனை ஒரு வலைஞன் கண்டு தன் வீட்டிற்கு இட்டுக்கொண்டு போய் உடை முதலியவைகள் கொடுத்து தன் வீட்டிலேயே இருக்கும்படி கேட்டுக்கொண்டான். இப்படி ஜயசேனன் கரையேறின தேசத்திற்கு சிம்மள தேசமென்று பெயர். அதன் அரசன் வீரதேவன். அவன் மிகவும் நற்குணமுள்ளவனும் ஜனங்களைக் காப்பாற்றுவதில் கவலைடையவனுமாக ஆண்டுவந்தபடியால், அவர்கள் அவனை உத்தம வீரதேவன் என்று கூப்பிட்டு வந்தார்கள். அந்த உத்தம வீரதேவனுக்கு அதிரூபவதியான பானுமதி என்னும் மகள் ஒருத்தி உண்டென்றும் அவள் பிறந்தநாள் இரண்டொரு

தினத்தில் வரப்போகிற தென்றும், அப்பொ
முது அநேக வேந்தர்கள்வந்து சபையில் மல்யுத்
தம் பண்ணப் போகிருர்கள் என்றும், அதில்
எவன் எல்லாரையும் ஜயிக்கிருனே அவனுக்கு
அவளைக் கலியாணஞ்செய்து கொடுக்கப் போ
கிருரென்றும் வலைஞன் சொல்ல ஜயசேனன்ஐயோ
பாவமது தகப்பனுர் கொடுத்தகவசம்சமுத்திரத்
தில் முழுகிப்போய் விட்டதே! அது இருந்தால்
நாமும் நாளை அங்கே போகலாமேயென்று நினை
த்துத் துக்கித்தான். ஏனெனில் இவன் தகப்ப
னுர் தன் கவசத்தைத் தான் இறந்துபோகும்
பொழுது ஜயசேனனிடம் கொடுத்திருந்தார்.
அதை எப்பொழுதும் தன்னைவிட்டுப் பிரியா
மல் ஜயசேனன் வைத்துக்கொண்டு அதைப்பார்
க்கும்பொழு தெல்லாம் தன் தகப்பனுரைப்
பற்றி நினைத்துக்கொண்டே இருப்பான். அந்த
கவசம் அவன் கூர்ஜர தேசத்தை விட்டு புறப்
பட்ட கப்பல் முழுகிப் போகும்பொழுது அத்
துடன் முழுகிப்போய் விட்டது. அந்த சமயத்
தில் கவசமில்லாமல் போனதைப்பற்றி ஜயசே
னன் துக்கப்படுகையில் மற்ருெரு வலைஞன்
தான் வலை வீசி இழுக்கும்பொழுது ஒரு கவ
சம் அகப்பட்டதாகக் கொண்டுவந்து கொடுத்
தான். அதை ஜயசேனன்பார்த்து தனது கவச
மா யிருக்கக்கண்டு கண்ணீர்விட்டு சமுத்திரமே
என்பேரில் மனமிரங்கி என் கவசத்தைத் திரு
ப்பிக் கொடுத்ததென்று சந்தோஷப்பட்டான்.
எப்படி என்கவசம் திரும்பிவந்ததோ அதுபோ
லவே என்பாக்கியமும் திரும்பி வருமென்று
எண்ணி அவன் மனமகிழ்ந் திருந்தான்.

மறுதினம் பானுமதி பிறந்தநாள். பூமியிலு
ள்ள அரசர்கள் எல்லாரும் அன்றையதினம்வீர
தேவன் அரண்மனையில் தங்கள் மல்லயுத்தத்
தைக் காட்டக் கூடினுர்கள். அவர்களுடன் ஜய
சேனனும் சென்று போர்செய்து ஒருவனுகவே
எல்லாரையும் ஜயித்தான். இவ்விதமாக ஜயிக்
கின்றவனுக்கு பானுமதி தக்க மரியாதை பண்
ணவேண்டு மாகையால் அவள் அங்குவந்து
அவன் கழுத்தில் அழகிய பூமாலையைச் சூட்டி
னுள். அவளது அழகு தான் காதினுல் கேட்ட
தைவிட அதிகமாகவே யிருந்ததால் ஜயசே
னன் அவள்மேல் அதிக விருப்பங்கொண்டு விசு
வாசமா யிருந்தான்.

உத்தமவீரன் தனது மாப்பிள்ளையாகிய ஜய
சேனனது வீரத்தைக்கண்டு மகிழ்ந்து அவ
னது வணக்கம் ஒழுக்கம் மரியாதை இவைகளு
க்கு அவனை மிகவும் மெச்சினுன். குலகோத்தி
ரங்களை மாமனுர் விசாரிக்கும்பொழுது உண்
மையைச் சொல்லிவிட்டால் நாமிங்கிருப்பது
ஜயாதனுக்கு தெரிந்துவிடுமென்று பயந்து உண்
மையை உரைக்காமல் தான் சாதாரண மனித
னென்று ஜயசேனன் தன்னைச்சொல்லிக்கொண்
டான். ஆயினும் சாதாரண மனிதன் தானே
யென்று வீரதேவன் தன் மருமகனிடம் விசுவா
ஸத்தையாவது, மரியாதையையாவது குறைக்க
வில்லை. அன்றுமுதல் பானுமதியுடன் கூடிக்
குலாவிக்கொண்டு காந்தாரதேசத்து அரசனு
கிய ஜயசேனன் தான் இன்னுனென்று காட்டிக்
கொள்ளாமலே சிம்மளதேசத்தில் வசித்து வந்
தான்.

சிறிது நாளைக்கெல்லாம் இவன் மந்திரியாகிய
சுசீலன் என்பவன் ஜயாதன் என்னும் பெரிய
அரசன் இறந்துவிட்டதாகவும் சீக்கிரம் ஜயசே
னன் காந்தாரதேசம் வந்து சேரவேண்டுமென்
றும் கடிதம் எழுதி அனுப்பினுன். இப்பொ
ழுதுதான் உத்தம வீரதேவனுக்குத் தன் மரு
மகன் ராஜவம்சத்தில் பிறந்தவனென்றும், அத
னுேடு நற்குண நற்செய்கைகளுக்குப்பேர்போன
வன் என்றும் தெரியவந்தது. முன்னமே இவன்
சாதாரண மனிதன் என்றெண்ணி யிருக்கும்
பொழுதே சந்தோஷித்து வந்த உத்தமவீர தே
வனுக்கு இப்பொழுது இவனிடத்திலுண்டான
ஆநந்தத்தைச் சொல்லவேண்டுமோ! ஆனுல்
தனது அருமை மகளும் மகனும் சீக்கிரம் தங்

கள் தேசத்தைவிட்டுப் போய்விடுவார்கள் என்பதை எண்ணிப் பார்க்கும்பொழுது ஜயசேனன் சாதாரண மனிதனாக இருந்தாலும் நலமாயிருக்குமென்று மாமனார் எண்ணவேண்டியதாயிற்று. மேலும் பானுமதி அப்பொழுது 7, 8, மாதகாலம் பிள்ளை உண்டாயிருந்தாள். உத்தமவீரன் தனது மருமகளைப் பார்த்து பெண்ணைப் பிரஸவகாலம் வரையில் அங்கு விட்டுப்போகும்படி கேட்டுக்கொள்ள அதற்கு அவன் இணங்கவில்லை; அன்றியும் பானுமதியும் தனது புருஷனோடுகூடப் புறப்பட்டுப்போகவே பிரியப்பட்டிருந்தாள். அவள் காந்தாரதேசம் போன பிறகுதான் பிரஸவிக்கும்படியாகும் என்று எண்ணியிருந்தாள்.

அவர்கள் இஷ்டத்தை தடைசெய்யாமல் வீரதேவனும் அவர்களைப் பிரயாணப்படுத்தி விட்டான். கப்பல் ஏறிக் கடலிலே பிரயாணம் செய்துகொண்டிருக்கையில் ஜயசேனன் பேரில் முன்கோபம் கொண்ட சமுத்திரம் சிலநாள் கழித்து மறுபடி கோபம் கொண்டதுபோல ஒரு பிரசண்டமாருதம் அடித்தது. அந்த சமயத்தில் பானுமதி பிரஸவ வேதனைகண்டு ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு கண்ணை மூடிக்கொண்டாள். அவளுடன் கூடவந்த தாதியாகிய சுமுகி யென்பவள் பிறந்தக் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு ஜயசேனனிடம் வந்து "உங்களுடைய பாக்கியம் இவ்வளவுதான். உயிருக்குயிரான உங்கள் பெண்ஜாதி இந்த சிசுவை யீன்று தனக்குப் பிரதியாக இதை பார்த்துக்கொண்டிருக்க உங்களுக்கு திட்டம் செய்துவிட்டு மாண்டாள்" என்று புலம்பினாள். இந்த சமாசாரம் ஜயசேனன் காதில் இடிவிழுந்ததுபோல் விழுந்து மூர்ச்சையடைந்தான். பிறகு எழுந்து 'தெய்வமே நீ நல்ல வஸ்துக்களைக் கொடுப்பானேன் பிறகுபிடுங்கிக்கொள்வானேன்" என்று பலவாறு புலம்பி அழுதான். சுமுகி என்பவள் இனி விசனப்படுவதில் பயன் என்ன, மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு சுவாமி கொடுத்திருக்கும் இந்தக் குழந்தையைப் பார்த்துப் போனதை மறக்கவேண்டும் என்று சொல்லிக் குழந்தையை ஜயசேனன் கையில் கொடுக்க, அவன் அதை வாங்கிக்கொண்டு அந்த பச்சை இளங் குழந்தையைப் பார்த்து உன்னைப்போல் இவ்வளவு துர்ப்பாக்கியத்துடன் பிறந்த குழந்தைகள் இந்த உலகத்தில் பிறந்ததுமுண்டோ? என் குழந்தாய்! ராஜ குமாரத்தியாய் நீ பிறந்தபோதிலும் உன்கதி இப்படியாயிற்றே! ஆனால் உன் வாழ்நாட்களாவது நன்றாக இருக்கவேண்டும். என்னதான் நீ க்ஷேமமாக விருந்தபோதிலும் அதைப் பார்த்துச் சந்தோஷிக்க இனி உன் தயார் இவ்வுலகத்திற்கு வரப்போகிறாளோ, என்று சொல்லித் துக்கப்பட்டுக் கோவென்று புலம்பினான்.

அடிக்கடி கடலில் அலைகள் எழும்பிப் புசலும் அதிகரித்துக்கொண்டே வந்தது. கப்பல்களில் பிணங்களிருந்தால் அவை சமுத்திரத்தி லெறியப்படுகிற வரையில் புசலும் அடங்கமாட்டாதென்று ஒரு அபிப்பிராயம் உண்டு. புசல் அதிகரிக்கவே அவர்கள் பானுமதி ஜயசேனன் பெண்சாதியாயிற்றே யென்றுகூட யோசிக்காமல் அவரிடம் வந்து இந்தக் க்ஷணமே பிணத்தைச் சமுத்திரத்தில் தள்ளிவிடவேண்டும்; இல்லாவிடில் புசல் நிற்கமாட்டாதென்றார்கள். ஜயசேனனுக்கு இது தப்பான அபிப்பிராயமென்று புலப்பட்ட தானாலும் அவர்கள் சொன்னதைத் தடுக்கக்கூடாமல் அப்படியேசெய்வதாக ஒப்புக்கொண்டு பெரிய பெட்டியொன்று எடுத்து அதில் மகமல் முதலிய பட்டுவஸ்திரங்களைப் பரப்பி புனுகு சவ்வாது முதலான வாசனைத் திரவியங்களைக் கொட்டி தனது மனைவியின் தேகத்தை ஆடை ஆபரணங்களுடன் அதற்குள் வைத்து அவள் இன்னாளென்றும் அவளை ஒருகால் யாராகிலும் பெட்டியுடன் கண்டெடுத்தால் தயைசெய்து அடக்கம்செய்ய வேண்டுமென்றும் ஒருகடிதம் எழுதிப் பெட்டியில் வைத்து அந்தப் பெட்டியை சமுத்திரத்தில் எறிந்து விட்டான்.

(இன்னும் வரும்).

—:o:—

## "Honi-Soit-Qui-Mal-y-Pence."
## கெடுவான் கேடு நினைப்பான்.

(ஒரு கதை)

(184–வது பக்கத்தொடர்ச்சி.)

கண் தெரியாமல் வருந்தின தையற்காரனுக்குத் தெய்வக்கடாக்ஷத்தால் இரண்டு கண்களும் நன்றாய்த்தெரியவே, அவன் அதிக சந்தோஷமடைந்து பட்டணம்போகப் புறப்பட்டு ஒரு தடாகத்தைத் தாண்டிப் போனானெனச் சென்ற சஞ்சிகையில் சொல்லியிருக்கிறதல்லவா? அங்கிருந்து இரண்டோரடிபோகையில் பெரியவிருக்ஷமொன்று இருந்தது. அதனடியிலிருந்த பொந்தில் பல தேனீக்கள் உள்ளே போவதும் வெளியே வருவதுமாயிருந்தன. அது கண்டு அந்த தையற்காரன், நம்முடையகாரியங்களுக்கு கடவுள் இங்கேதான் வெகுமதி செய்ய நினைத்திருக்கிறார். இந்தத் தேன் கூட்டிலுள்ள தேனைக்குடித்துக் களைதெளியலாமென்று சொல்லிக்கொண்டே அதனருகே சென்றான். ஆயினும் அவன் இப்பேச்சை சொல்லி முடிப்பதற்கு முன்னமே அந்தத் தேனீ கூட்டுக்கு அரசியான தேனீ அவனண்டைக்குப் பறந்தோடி வந்து 'பையலே நீசிறுபிள்ளைத் தனத்தால் தாறுமாறாய் ஏதாவது அநியாயம் செய்யப் போகிறாய்; என்னுடைய ஈக்களையாவது என் தேன் கூட்டையாவது தொடுவாயானால் உடனே உன் பிராணன் போய்விட்டதென்றே நினைத்துக்கொள். நாங்கள் பதினாயிரம் பேராய் ஓடிவந்து உன்னுடம்பில் ஊசிநாட்ட இடமில்லாமல் கொட்டிக் குளம் பறித்துவிடுவோம். உன் வழியை பார்த்துக்கொண்டே நீபோய்ச் சேர்; சமயம் வரும்போது நானும் என்னாலியன்றவுதவி உனக்குச் செய்கிறேனென்று சொல்லிற்று. அது கேட்டு அந்த தையற்காரன் இதென்ன துரதிர்ஷ்டம்? எங்கே போனாலும் கைக்கெட்டுகிறது வாய்க்கெட்டுகிறதில்லையே என்று விசாரப்படடுக்கொண்டு பட்டணத்துக்குப் போனான். அப்பொழுது நடுப்பகல். அங்கே ஒரு சத்திரத்தில் சாப்பாடு சித்தமாய்ச் சமைத்து வைத்திருந்தது. இவன் அந்தத சத்திரத்திற்குள் நுழைந்து அங்கே ஒருவரும் இல்லாதிருப்பதுகண்டு இது கடவுளுடைய அனுக்கிரகந்தான் என்று எண்ணி அங்கிருந்த உணவுகளை எடுத்து வயிறாரப்புசித்து விட்டுப்பிறகு எங்கேயாவது ஒரு வேலை தேடிக்கொள்ளும்படி வெளியே போனான் பட்டணத்தில் நாற்புறமும் சுற்றுகையில் அங்கு பெரிய மனிதன் அவனைப்பார்த்து இவன் மிக்க வல்லவனென்று தெரிந்து அவனைத் தன்னிடத்தில் ஒரு வேலைக்காரனாக வைத்துக்கொண்டான். முன்னமே அவன் தன் தையல்வேலையில் நன்றாய்ப்பழகியவனாதலால் சிக்கிரத்திலே மிக்கப் பிரசித்தி பெற்று பல கனவான்களுக்கும் பிரபுக்களுக்கும் சிறந்த உடைகள் தைத்துக் கொடுக்கலானான். யாவரும் அச்சிறுவனுடைய தையல் வேலையைப்பார்த்து வியந்து கொண்டாடினார்கள். இப்படியே நாளுக்குநாள் விருத்தியடைந்து கடைசியில் ராஜாவினுடைய அந்தப்புரத்துத் தையற்காரனானான்.

எது எப்படியானாலும் தெய்வச்செயலை யார் அறியக்கூடும்? அதேதினத்தில் இந்த தையற்காரனுக்குப் பழைய தோழனான தச்சனும் அதே அரசனுக்கு மேஜை நாற்காலிகள் செய்துகொடுக்கும் பெரிய உத்தியோகம் பெற்றான். அவன் இந்த தையற்காரனைப் பார்த்து தான் குத்திக் கெடுத்துவிட்ட இரண்டு கண்களும் நன்றாய்த் தெரிந்து போயின என்று கண்டு ஓகோ? இதென்ன விபரீதம்! கெட்டுப்போன கண்கள் யாருக்காவது முளைப்பது உண்டா! மேலும் இவன் நமக்குச் சரியான உத்தியோகஸ்தனாய் வந்து சேர்ந்தானே இனி இவன் நம்மை பழிவாங்காமல் விடான். அதற்கு முன்னமே நாம் முயன்று இவனை நம்முடைய வலையில் சிக்கிக்கொள்ளச் செய்யவேண்டுமென்று எண்ணினான். பிறர்க்குக் கேடுநினைப்பவன் தா

னே கெடுதியடைவானென்பது அவனுக்குத் தெரியாது. அதனால் தச்சன் அன்றைய தினம் மாலையில் தான் வேலை செய்துவிட்டு வரும்போது அரசனிடத்திற்குப் போய் காதோடு ஒரு துர்ப்போதனை செய்தான். அதாவது மகாப் பிரபுவே ஒரு விண்ணப்பம் செய்கிறேன். இப்பேதையினிடத்தில் சித்த மிரங்கவேண்டும். இந்த தையற்காரப் பையன் தனக்கு சரி ஒருவரும் இல்லையென்று அதிக அகங்காரம் கொண்டிருக்கிறான். நெடுநாளைக்குமுன்னே காணமற்போன தங்கள் ராஜகிரீடத்தைத் தான் தேட வல்லவன் என்று அங்கங்கே பெருமை பேசுகிறான் என்றான்.

அதைக்கேட்டு அரசன் அப்படியா இத்தன்மையான திறமையுள்ளவன் ஒருவன் கிடைத்தது நம்முடைய பாக்கிய விசேஷமே என்று சொல்லிச் சந்தோஷமடைந்து அவனை மறுநாள் காலையில் தன்னிடம் வரவழைக்கச் சட்டளையிட்டான். அப்படியே தையற்காரன் வந்தபோது ராஜா அவனைப்பார்த்து 'நீ பெருமை பேசினபடியே சாணமற்போன கிரீடத்தைக் கூடிய சீக்கிரத்தில் தேடிக் கொண்டுவந்து கொடுக்கவேண்டும்; இல்லாவிட்டால் இங்கே எப்பொழுதும் தலைகாட்டாமல் இந் நாட்டைவிட்டு ஓடிப்போகவேண்டும்' என்று உத்தரவு பண்ணினான்.

அந்தக் கொடுமையான கட்டளையைக் கேட்டுத் தையற்காரன் இனி இப்பட்டணத்திலிருக்க நமக்கு ஆசையில்லை, எவர்க்கும் அசாத்தியமான காரியத்தைச் செய்யக் கட்டளையிட்டால் நாம் என்ன செய்கிறது. இப்பொழுதே இவ்விடம் விட்டு ஓடிப்போக வேண்டுவது என்று நிச்சயித்து தன் சாமான்களையெல்லாம் கட்டி யெடுத்துக்கொண்டு தனக்கு விசேஷமாகப் பொருள் கிடைத்துக்கொண்டிருந்த அப்பட்டணத்தைவிட்டுப் போகமனமில்லாமல் விசனப்பட்டுக்கொண்டே புறப்பட்டுப் போனான்.

பட்டணத்துக்கு அப்பால் சிறிதுதூரம் போய் அங்கே முன்தான் வாத்துக்குஞ்சுகளை பிடிக்கப்போன குளத்தின் கரையில் ஒரு மரத்தடியிலே முகம்வாடி தலையிறங்கி உட்கார்ந்தான். அங்கே தன் குஞ்சுகளோடு கூடக் கரையிலே விளையாடிக் கொண்டிருந்த வாத்து அவன் இன்னானென்று அடையாளம் கண்டுபிடித்து அவனண்டை வந்து 'நீ ஏன் விசனமுற்றிருக்கிறாய்' என்று கேட்டது. அதற்கு அவன் நடந்தவாலாற்றைச் சொல்லி இதற்காக தேசாந்தரத்துக்கு ஓடிப்போம்படி நேர்ந்ததேயென்று விசனப்படுகிறேன் என்றான். அதைக்கேட்டு வாத்து இவ்வளவுதானா? இந்த அற்ப காரியத்திற்காக வா நீ விசனப்படுகிறது, வேண்டாம், உனக்கு கைகொடுக்க நான் இருக்கிறேன். ராஜாவினுடைய கிரீடம் இந்த தடாகத்திலேதான் விழுந்து கிடக்கிறது. நான் இதோ எடுத்துத் தருகிறேன் என்று சொல்லிவிட்டுச் சரேலென்று போய்த தன் பன்னிரண்டு குஞ்சுகளோடுங் கூடத் தடாகத்தில் மூழ்கிற்று. தையற்காரன் கரைமேல்நின்று அந்த விசித்திரத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தான். மூழ்கின நாலைந்து நிமிஷத்துக்குள் பெரியவாத்தின் பரந்த சட்டையின்மேல் கிரீடத்தை வைத்து குஞ்சு வாத்துக்களெல்லாம் அதை மூக்கினால் பிடித்துக்கொண்ட வண்ணமாய் அவைகளெல்லாம் மேலே தோன்றி மெல்ல மெல்லக் கரையோரத்துக்கு வந்தன. உடனே தையற்காரன் அதை வாங்கித் தன் மேலாடையில் வைத்துக்கொண்டு அதன் அழகைக்கண்டு வியந்து நிற்க அதைச் சுகமாய் எடுத்துக்கொண்டு போம்படி அவனுக்கு உத்தரவு கொடுத்துவிட்டு வாத்துகள் போய்விட்டன. அற்புதமான அந்தப் பழைய கிரீடத்தை அவன் கொண்டுபோய்க் கொடுத்தபோது அரசனுக்குஉண்டான ஆநந்தத்தை என்னென்று சொல்லலாம்! அந்த எளிய தையற்காரனைக் கட்டி முத்தமிட்டுக் கொண்டு அவனுக்குப் பலவிதமான மரியாதைகள்செய்து கடைசி

யில் தான் அணிந்துக்கொண்டிருந்த ஒரு சிறந்த முத்தாரத்தை அவனுக்கு வெகுமதியாகக் கொடுத்தான்.

இந்த சமாசாரத்தைக் கேள்வியுற்ற தச்சன், தான்செய்த சூது சிறிதும் பயன்படாமற் போனதுமன்றி, தையற்காரனுக்கு அத்தனை உயர்வு உண்டாவதற்கு ஏதுவானதைக் கண்டு மிகவும் விசாரமுற்று மற்றோர் துராலோசனை செய்துகொண்டு சிலநாள் கழித்து அரசனிடத்துக்குப்போய் மகாப் பிரபுவே, ஒரு விண்ணப்பஞ் செய்கிறேன். அது தங்கள் சித்தத்துக்கு எப்படி இருக்குமோ, இந்த தையற்காரன் முன்னிலும் அதிக அகங்காரியாய் இருக்கிறான். மகாராஜாவினுடைய மாளிகையின் வடிவத்தை உள்ளும் புறமும் சிறிதளவுகூட வேற்றுமையில்லாமல் உள்ளே அமைத்திருக்கிற சகலமான பொருள்களோடுகூட மெழுக்கில் அமைக்க மாட்டுவேன் என்று பெருமை பேசிக்கொள்ளுகிறான். அதைக் கேட்க எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது என்றான். அரசன் அது உண்மைதானென்று நம்பி உடனே தையற்காரனை வரவழைத்து 'நீ நமது கோட்டையின் வடிவழகை அதிலுள்ள சகலமான பொருள்களோடுகூட சரியாக மெழுக்கில் அமைக்க வல்லவனென்பதாய் பெருமை பாராட்டினதாகக் கேள்விப் படுகிறேன். அப்படியே அதிசீக்கிரத்தில் நமக்கு ஒரு சித்திர உருவம் நிருமித்துத்தரவேண்டும். அதில் எங்கேயாவது ஒரு மூலையில் சிற்றணியொன்று தவறிப்போனாலும் உன்னைப் பாதாளத்தில் ஒரு அறையில் ஆயுளளவும் சிறையாய் அடைத்துப் போடுவேன், என்று கட்டளை இட்டான். இக்காரியத்தை நிறைவேற்ற யாராலாவது ஆகுமா? அதைக்கேட்டு தையற்காரன் இதென்ன துர்பாக்கியம்! வருவதெல்லாம் நமக்கு விபரீதமா யிருக்கிறதே, இனி நாம் இத்தேசத்தைவிட்டு ஓடிப்போவதே சரியென்று நிச்சயித்துத் தன் மூட்டையைத் தோளிலே மாட்டிக்கொண்டு ஓடிப்போகப் புறப்பட்டான்.

சிறிது தூரம்போய் இளைப்பினால் முன் தான் கண்ட பொந்து மரத்தடியிலே உட்கார்ந்து விசாரப்பட்டுக்கொண்டு இருந்தான். அப்பொழுது வெளியேபோயிருந்த தேனீக்களெல்லாம் திரும்பித தங்கூட்டுக்கு வந்தன. அவைகளுக்கெல்லாம் அரசனான ஈ இவனைப்பார்த்து 'நீ ஏன் இப்படித் தலை இறக்கிக்கொண்டிருக்கிறாய் தலையில் ஏதாவது தொந்தரவா' என்று கேட்க அவன் 'எனக்கு தலைநோயில்லை. அதைவிடக் கொடிதான மற்றொருநோய் என்னை மிகவும் வருத்துகின்றது' என்று அதன்மேல் நடந்த வரலாறுகளையெல்லாம் இப்படியென்று தெளியச் சொன்னான். அதைகேட்டு அந்தத் தேனீ 'ஆனால் நீ இதற்காக விசனப்படவேண்டாம். வீட்டுக்குப் போய்ச் சுகமாயிரு; நாளை இந்நேரத்துக்கு ஒரு பெரிய பையை எடுத்துக்கொண்டு வா; அப்போது நீ வேண்டுவது சித்தமாயிருக்கும்' என்று சொல்லிற்று. அதைக்கேட்டு தையற்காரன் கொஞ்சந் துக்கம் தெளிந்து வீட்டுக்குப் போய்விட்டான்.

(இன்னும் வரும்.)

———:-:———

## Do you want Employment?
## உத்தியோகம் வேண்டுமா?

———:(*):———

தற்காலத்தில் இந்தியா தேசத்தில் சுதேசிகளனேகர் மானிட தேகலக்ஷண சாஸ்திரம்-ஸ்தாவர் சங்கம லக்ஷண சாஸ்திரம், மனோதத்துவ லக்ஷண சாஸ்திரம், வான சாஸ்திரம், பூலோக சாஸ்திரம், கணித சாஸ்திரம் பிரிதிவாதி பூத லக்ஷண சாஸ்திரம் ரசாயன சாஸ்திரம் முதலிய சகல சாஸ்திரங்களிலும் மஹா பாண்டித்தியமடைந்தும் மிக விவேகவிளக்கம் பெற்றும் தமக்கு உத்தியோகம் அகப்படவில்லையே யென்று நடுக்கடலிற் றிசைதப்பி மயங்கும் மாலுமிபோல் மனம்புழுங்கித் தளர்ச்சி யடைகிறார்கள். அப்படிப் பட்டவர்கள் பிழைக்கவகை யறியா

தவர்கள். ஒருவனுக்கு புத்தி ஒன்றுமாத்திரம் நன்றாய் அபிவிருத்தியா யிருக்குமாயின் அவன் உத்தியோகம் வேண்டுமென்று அலைவது வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கும் ஆற்றினின்றுகொண்டு ஜலத்துக்கும் ஏக்கம் அடைதலை ஒக்கும். நமது நாட்டில் நாற்புறமும் சிதறுண்டு கிடக்கும் பண்டை துத்தி சணல் முதலிய நார் தென்னை பனை இவற்றின் மட்டைகள், வாழை முதலியவற்றின் சாகு, பிரம்பு கருப்பஞ் செத்தை மூங்கில் வைக்கோல் புல் பூண்டு முதலியவைகள் அதிக நாணயமான காகிதஞ் செய்வதற்கு உபயோகமாகத் தக்க வஸ்துக்கள் என்பதை மேற்கண்ட பற்பல சாஸ்திரங்களிலும் கல்வி பயின்றவர்கள் அறியார்களோ? நாம் இந்நாட்டில் அணிந்துகொள்ளும் வஸ்திரங்கள் யாவும் இங்கிலாந்திலிருந்து நமக்கு வருவதை அவர்கள் அறியார்களோ? இந்நாட்டில் பஞ்சை கண்ட சர்க்காரிருந்தும் நம்முடைய உடைகளை அந்நிய நாட்டாரை 'ஏனோ' சித்தஞ்செய்யயுப்படி விடவேண்டும்? சாஸ்திர உணர்ச்சியும் விவேக விளக்கமும் ஒருவன் அடையப் பெறுவானாயின், இலேசாய்க் கிடைக்கத்தக்க மேற்கண்டவை போன்ற வஸ்துக்களைக் கொண்டு மிக்கலாபகரமான வர்த்தகங்களைச்செய்யக்கூடாதா? எழுத்தாணிமாத்திரம் அசைய அரசனிடத்து கட்டளை பெற்றுக்கொண்ட ஒருபுத்திமான் விவேக மொன்றினாலேயே அவ்வரசன் வியக்கும்படி நடந்துகொண்டு பிறகு அவனால் நன்கு மதிக்கப்பெற்று பெருத்த தனவானான ஒரு சரித்திரத்தை அடியில் எழுதுகிறோம்:—

மாளவம் என்னும் தேசத்தில் மதிவல்லபன் என்னும் பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் அதி நுட்ப புத்தியும் யுக்தியும் உடையவனாயிருந்தும், காலானுகூல மில்லாமையால் நெடுநாள் உத்தியோகமின்றி வறுமையால் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருந்தான். ஒரு நாளிரவில் அவன் மனைவியாள் 'பிராணநாதா!

"நெருப்பினுடஞ்சலு மாகுமிரப்பினுள்
யாதொன்றுங் கண்பாடரிது"

என்னும் வாக்கியத்தின்படி, இன்று முழுவதும் ஆகாரமில்லாமையால் நம்முடைய குழந்தைகள் நித்திரை செய்யவில்லை, பசிநோயால் வருந்துகின்றன. இதற்கென் செய்வது? என்று மனந்தளர்ந்து கூறினாள். மதிவல்லபன் மனையாளை நோக்கி, 'பெண்ணே, நான் செய்யாத முயற்சியில்லை. இவ்வூரிலுள்ள பெரிய மனிதர்களிடத்திலெல்லாம் நான் பல்காலும்போய்த் திரிந்து வருகிறேன், என்னுடைய கால துர்பலத்தால் எங்கும் ஒரு உத்தியோகம் கிடைக்கவில்லை; என்னுடைய எழுத்தாணி சற்று அசைய இடங் கிடைக்குமானால் நாம் தனிகராய் விடலாமே! அவ்வளவுக்குகூட நல்லகாலம் வாய்க்கவில்லையே, நான் யாது செய்வேன்?' என்று சொல்லிக்கொண்டிருக்கையில் அது அர்த்தராத்திரி யாகையால் அவ்வூர் அரசன் நகர் சோதனைக்கு வந்தான். வந்த அரசன் சுவரடியிலொதுங்கியிருந்து உள்ளே அவ்விருவரும் பேசிய விஷயங்களை நன்றாய்க் கேட்டறிந்து தன் அரண்மனைக்குப் போய்விட்டான். மறுநாள் அரசன் தன் சேவகர்களால் அந்த மதிவல்லபனை அழைப்பித்து, நீ நேற்றிரவில் உன் எழுத்தாணி சற்றே அசையவும் இடங்கிடைக்கவில்லையென்றல்லவா உன் மனையாளுடன் சொல்லி விசனப்பட்டாய்? நான் உனக்கொரு உத்தியோகத்தினால் உன் எழுத்தாணி மாத்திரம் அசையுமேயன்றி உனக்கொன்றும் சம்பளம் கிடைக்கமாட்டாது, அதற்கு சம்மதமாயின் என் ராணுவத்திலுள்ள யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், ஆடு மாடுகள் ஆகிய இவைகளில் ஒவ்வொன்றையும் பற்றிய தினத்தனிக் கணக்கு வைப்பதினாலே உன் எழுத்தாணியை ஓயாமல் அசைத்துக்கொள்ளலாம் என்று சொன்னான். மதிவல்லபன் அதற்கிசைந்து, கட்டளைப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு திரும்புங்காலையில், அவ்வூரிலுள்ள ஒரு தனவானிடஞ் சென்று,

நிகழ்ந்த சங்கதியை யெல்லாஞ் சொல்லி அக்கட்டளைப் பத்திரத்தையும் அவனுக்குக் காண்பித்து ஆறுமாதத் தவணைக்கு அவனிடத்தில் ஆயிரம் வராகன் கடன் வாங்கிக்கொண்டு தன் வீட்டுக்கு வந்தான். உடனே மதிவல்லபன் குடிக்கூலிக்கு ஒரு நல்ல வீடு வாங்கி, நல்ல ஆடையாபரணங்கள் பூண்டு, சொந்த வாகனமும் வைத்துக்கொண்டான். அதனால் பல ஜனங்களும் அவனை நன்கு மதித்துச் சதா அவனைச் சூழ்ந்திருக்கும்படி இடமுண்டாயிற்று. "கைத்துடையான் காற்கீழொதுங்கும் கடன் ஞாலம்" என்னும் உண்மையானுபவாக்கியம் அவனிடத்தில் திருஷ்டாந்தமாய் விளங்கியது. பின்பு அந்த மதிவல்லபன் அப்பட்டணத்தில் உத்தியோகமில்லாதவர்களுட்சிலரை அழைப்பித்து, தான் அரசனிடத்தில் பெற்ற கட்டளைப் பத்திரத்தை அவர்கட்குக் காட்டி, தனக்குக் கிடைத்த இப்பெரிய உத்தியோகத்திற்குச் சம்பிரதி கணக்கப்பிள்ளை சேவகர் முதலிய கீழிட்ட உத்தியோகஸ்தர்கள் சிலர் வேண்டியதென்றும், அந்தப்படி உத்தியோகத்துக்கு வருபவர்கள் மூன்றுமாதகாலம் வரையில் சம்பளமில்லாமல் வேலை செய்யவேண்டியதென்றும், பிறகு தகுந்த சன்மானம் அளிக்கப்படுமென்றும் சொல்லிச் சிலரைத் தன் கீழ் உத்தியோகஸ்தராக வைத்துக்கொண்டான். அப்பால் மதிவல்லபன் அக்கீழ் உத்தியோகஸ்தர்களையனுப்பி இராஜனுடைய யானைப்படை குதிரைப்படை முதலியவற்றிற்குத் தீனி முதலியன விசாரணைசெய்யும் அதிகாரிகளை அழைப்பித்தான். அவர்கள்வந்து மதிவல்லபனைக் கண்டு வணங்கி நின்றார்கள். மதிவல்லபன் அவர்களை நோக்கி 'நீங்கள் நெடுங்காலமாய் இவ்வுத்தியோகத்தில் மிகுந்த ஆதாய மடைந்து வருகிறீர்களென்பதை நான் நன்றாய் அறிந்திருக்கிறேன். நாளைய தினம் யானைக்கூடம் குதிரைலாயம் மாடுததொழும் ஆட்டுப்பட்டி முதலிய இடங்களை பரிசோதனைசெய்ய நான்வருவேன். நீங்கள் யானை குதிரை முதலானவை இடுகிற கழிவு முதலியவற்றை வாருமலும் ஒன்றுடன் மற்றொன்றைக் கலக்காமலும் போட்டது போமடவண்ணம் அங்கங்கே இருக்கும்படி பத்ரு ஜாக்கிரதையாய் வைத்திருங்கள்' என்று வற்புத்தி அனுப்பினான். அவர்கள் அவ்வாறு செய்து யாது விளையுமோவென்று காத்துக்கொண்டிருந்தார்கள். மதிவல்லபன் மறுநாட்காலையில் தன் சிவிகையின் மேலேறிக்கொண்டு சேவகர்களும் பிரதிகளும் கணக்கப்பிள்ளைகளும் தன்னைச் சூழ்ந்துவர முக்கோணம் தராசு நிறுக்குங் குண்டுகளுடன் அவ்விடஞ்சென்று அவைகளைத் தனிதனி நிறுத்தி ஒருதாரத்துக்கு இவ்வளவு எடையானல் ஒருநாளைக்கு இத்தனை தாரத்துக்கு இவ்வளவு என்றும், ஒருமாதத்துக்கு இவ்வளவு என்றம், அதற்கு விலை யிவ்வளவு என்றும் கணக்கிட்டான். பிறகு மதிவல்லபன் அந்த அதிகாரிகளை நோக்கி 'நீங்கள் யானை குதிரை ஆடுமாடுகளுக்கு யதாந்தரம் கொடுக்கும் தீனிகளுக்கும் வைக்கும் கணக்குகளுக்கும் உள்ள வித்தியாசங்களையும் நான் பரிசோதனை செய்யவேண்டியிருக்கிறது' என்று அவர்களை அனுப்பிவிட்டான். அவர்கள் நெடுங்காலமாய் அரசன் அந்தப்பிராணிகளுக்காக கொடுத்துவரும் தீனிகளில் சிலவற்றைத் திருடி மிகுத்த ஆதாயம அடைந்து வந்தவர்களானபடியால் உள்ளங்கலங்கி,

"ஆற்றங்கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே."

என்னும் உண்மை வாக்கியத்தின்படி நம்முடைய புரட்டுக் கணக்கை அரசனறிந்தால் ஆபத்து விளையுமே யென்றஞ்சி பை பையாகப் பணமும் இனிமேலடையும் ஆதாயத்தில் மதிவல்லபனுக்குப் பங்கு தருவதாக உடன்படிக்கையும தனித்தனி அவனுக்குக் கொடுத்தார்கள். உடனே ஒருநாள் மதிவல்லபன் தனியே சென்று அவனுடைய ஊழியக்காரர்கள் நெடுநாளாய் இராஜத்துரோகம் செய்துவந்த விஷ

யத்தை அவர்கள் தனக்கெழுதித்தந்த உடன்படிக்கையின்படி அளித்த இலஞ்சத்தொகைகள் முதலியவற்றையே சாட்சியமாகக் காட்டி அரசனுக்கு நிரூபித்தான். இதைக்கண்டு அரசன் அவ்வூழியக்காரர்களைத் தக்கவாறு தண்டித்து மதிவல்லபனுடைய விவேகத்தைப் பலசாலும் வியந்து அவன் கடன் வாங்கியிருந்த தொகைக்கு இரட்டிப்பு அவனுக்கு வெகுமானங்கொடுத்ததுமன்றி அவனுடைய கீழ் உத்தியோகஸ்தர்களுக்கும் வேண்டியமட்டில் பொருள் தந்தான்.

இன்னும் அவனுடையமதிவிளக்கத்தைச் சோதிக்கவேண்டுமென்று சுருதி பொருள் வரவுக்கு சிறிதும் இடமில்லாத வேறொரு உத்தியோகத்தை இவனுக்குக் கொடுத்து அதில் இவனுடைய அறிவின் சாமார்த்தியத்தைப் பார்ப்போம் என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு மதிவல்லபனே இப்பொழுதிருக்கும் உத்தியோகத்தை யொழித்து வேறொன்று நான் உனக்கு கட்டளை யிடுகிறேன். அதிலும் உனக்குச் சம்பளம் கிடையாது உன் எழுத்தாணியைமாத்திரம் ஓயாமல் அசைத்துக்கொள்ளலாம். அது யாதெனில் நம்முடைய அரண்மனை வாசலில் கட்டியிருக்கும் மணியை காலக்கிரமப்படி அடித்து அதை எட்டில் அப்போதைக்கப்போது இத்தனையென்று எழுதிக் கொள்வதினால் உன் எழுத்தாணியை நீ அசைத்துக்கொள்ளலாம் இவ்வுத்தியோகத்தை இன்று முதல் பார்த்துவருவாயென்று அரசன் மதிவல்லபனுக்கு கட்டளையிட்டான். மதிவல்லபன் அரசனை வணங்கி அதைப்பெற்றுக்கொண்டு அன்றுமுதல் அவ்வுத்தியோகத்தைப் பார்த்துவந்தான். அதில் அவனுக்கு ஒரு காசளவும் பயன் கிடைக்கவில்லை. அதற்குமேல் அவன் அரசனுடைய தேவிமார்கள் ஐந்துபேரில் ஒருத்தியிடத்திலுள்ள தாதியை வரவழைத்து நான் உன் எஜமாட்டியிடத்தில் அரசன் இரவில் நாடோறும் வரும் காலத்துக்கு சற்று முன்னதாகவும் இருந்து மற்றொரு தேவிவீட்டுக்குப் போவதற்கு சிறிது காலம் பின்னாகவும் மணியடிக்கிறேன். அந்தப்படி செய்வதானல் ஏனைய நாயகிமார்களிடத்தில் இருப்பதைவிட உன்தலைவியினிடத்தில் அரசன் அதிகநேரம் இருந்து சுகிப்பதற்கு இடமிருக்கும் நான் மணியை அடித்தாலல்லவா அவளைவிட்டு மற்றொரு நாயகினிடத்தில் அவரெழுந்து போவார். நீ உன் எஜமாட்டியிடத்தில் இது விஷயத்தைப்பற்றி சொல்லி எனக்கேதேனும் பொருளாதாயம் உண்டாக்கினல் உனக்கு நான் அதிற் சிறிது தருகிறேன் என்று சொன்னன். அந்தத்தாதி அதற்குடன்பட்டு அந்த சங்கதியைத் தன் எஜமாட்டியினிடம் சொன்னள். மதிவல்லபன் இச்சங்கதியைச் சொன்னநாள் முதல் அவ்வாறே மணி அடித்து வந்தமையால் அரசன் அந்த தேவிவீட்டுக்கு போயிருக்கும் காலம் முன்னினும் சிறிது அதிகமாயிருந்தது. நாளுக்குநாள் பின்னும் கொஞ்சம் அதிகரித்து வந்தது. இதனல் அரசன் மற்றத் தேவிமார் வீட்டிலிருப்பதைப் பார்க்கிலும் இங்கு மிகவும் அவகாசமாயிருக்கும்படி நேரிட்டது. அக்காரணத்தால் அரசனுக்கு அந்த தேவியிடத்தில் அதிகபிரீதி உண்டானமையால் அவள் மணி அடிக்கும் மதிவல்லபனுக்கு வேண்டிய பொருளும் விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் வெகுமானமளித்து வந்தாள்.

(இன்னும் வரும்.)

———:(*):———

## Educational Grants.

## கல்வி சம்பந்தமான கிராண்டுகள்.

———:o:———

அடியிற் குறிப்பிட்ட தொழில் கல்விக்கான பாடசாலைகளுக்கு ஸ்பெஷல் கிராண்டுகள் கொடுப்பதைக் குறித்து ஏற்கனவே இவ்வருஷத்திற்காகக் குறிக்கப்பட்டிருக்கும் 8-லட்ச ரூபா அல்லாட்மெண்டில் பன்னீராயிரம் ரூபா உபகரிக்க மதிராசு கவர்ன்மெண்டார் சாங்க்ஷன்

செய்திருக்கிறார்கள். அந்தப் பாடசாலைகள் எவை யெவை யென்றால் கோயமுத்தூரிலுள்ள ஸெயிண்ட் ஜோஸப் தொழிற் கல்விச்சாலை; கரூர் வெஸ்லியன் மிஷன் இண்டஸட்ரியல் ஸ்கூல்; சென்னை செங்கல்வராய நாய்க்கர் டெக்னிகல் இன்ஸ்டிடியூட்; ஆர்ணி ஆர்காட் அமெரிகன் மிஷன் பாடசாலை; திண்டிவனம் ஸெயிண்ட் ஜோஸப் ஆர்பன் பாடசாலை; மதிராசு அஞ்சுமானி மபூதியாலி இஸ்லாம்; நாஜாத் ஆர்ட்தொழி கல்விக்கூடம்; புத்தூர் ஆல்ஸெயின்ட்சு பாய்சு பாடசாலை, வெல்லூர்; அஞ்சுமானி இஷா ஆதுல் ஹஸ்நாத் நாயுடுபேட்டை H. G. L. M. இண்டஸ்டிரியல் ஸ்கூலை இன்னும் திறமைபடி நடத்தவும் இதில் கற்பிக்கப்படும் தொழிற்கல்வி பயிலுவோர்க்கு எவ்விதத்திலும் பிரயோசனப் படும்படிக்கும் ஆக இந்நன்கொடைகள் சாங்க்ஷனு மிருக்கின்றன. அந்த ஸ்கூலின் கர்ரெஸ்பாண்டெண்டுகள் வேண்டிய கருவிகளுக்கு எழுதி அவை தொழிற்கல்வி ஸூபரிண்டெண்டெண்டினால் அங்கிகாரமாக வேண்டும். இந்த சாமான்கள் வாங்குவதற்கான கிராண்டு பணம் அந்தந்தப் பாடசாலையாருக்கு பகுக்கப்படும் விஷயத்தைக் கவனிக்கும்படி மேற்படி ஸூபரிண்டெண்டவர்கள் கேட்கிறார்.

இதுநிற்க கல்வித்துறையில் நமது பண்டிதர்களைக் குறித்து இன்னுமொரு திருப்திகரமான அம்சம் தெரியவருகிறது. கவர்ன்மெண்ட் பள்ளிக்கூடங்களிலும் கலா சாலைகளிலுமுள்ள சுதேச பாஷா பண்டிதர்களுக்குச் சம்பளமும் கவுரமும் அதிகமாய் கொடுத்து ஆதரிக்கும் ஏற்பாட்டை நமது கவர்ன்மெண்டார் அவர்கள் அங்கீகரித்து அவ்விதமே 1913–ம் ளூ மார்ச் மாதம் 1௳ முதல் அமுலுக்குக் கொண்டுவர உத்தரவிட்டு விட்டாரெனக் கேட்டு சந்தோஷிக்கிறோம். இப்புதிய சட்டத்தின் முக்கிய மாசங்களாவது; தமிழ் முன்ஷி அல்லது பண்டிதர்களது கடைசி கிரேடு ரூ. 30–5–40-தாக விருக்கவேண்டும். சம்பளம் 10–வருஷங்களுக்கு மேல் உயர்த்திக் கொடுக்கவேண்டும். பண்டிதர்கள் இருபதுபேர் நியமிக்கப்பட வேண்டும். அவர்களில் இருவருக்கு தலைக்கு ரூபா 80–4/2 100 ம் 11 பேர்களுக்கு ரூபா 60–3/2–65–ம் 4 பேர்களுக்கு ரூபா 40–2/2–50-ம் 3 பேர்களுக்கு ரூபா 30–2/2–40-ம் கொடுக்கப்பட வேண்டுமென் பவைகளே. இவை யனைத்தையும் கவர்ன்மெண்டார் அங்கீகரித்து விட்டனர். கல்வியிலாகா டைரக்டர் அவர்களை இதற்குப் பிடிக்கும் மொத்தச் செலவு இன்னதென்பதை வியக்தமாய் எழுதியனுப்பக் கவர்ன்மெண்டார் கேட்டுக்கொண் டிருப்பதாயு மறிவிக்கப்படுகிறது.

——:*:——

## ஓர் அற்புதக் காட்சி.

——:*:——

அக்டோபர்மாதம் 14௳ 'ஹிந்து நேச'னில் பின்வரும் விஷயம் வேளிவந்திருக்கிறது.—

"நேற்று முன்தினம் சென்னையிலிருந்து போட்மெயிலில் மதுரைக்குப் புறப்பட்டுப்போன ஒருவர் தாம் கண்டதோர் அபூர்வக் காட்சியை எழுதியிருக்கிறார். "போட்மெயிலானது விழுப்புரம் ஸ்டேஷனைத் தாண்டி விட்டது. அதற்கடுத்தாற் போலிருக்கும் ஓர் சிறு ஸ்டேஷனையும் கடந்துவிட்டது. அப்போது வேளையோ நடுநிசி; நள்ளிருள் எவ்விடத்தும் கவ்விக்கொண்டது. மேகம் மூட்டத்துடன் பிசுபிசென்று தூறலுமிருந்தது கனவேகமாய் டிரெயின் போய்க்கொண்டிருந்தது. அதற்கு இடது பாகத்திலே நடுவயலில் அக்கினிகுண்டம் இருந்ததுபோலும், அது சுவாலை விட்டெரிய அதைச் சுற்றிலும் ஒருவர் நின்று வேடிக்கை பார்த்தது போலும், அத்துடன் அவர்கள் கில்லாமல் கொழுந்து விட்டெரியும் தீயின் நடுவே அவர்கள் எதிர்நோக்கிப் போய் வந்தது போலும் தெரிந்தது, நான் உட்கார்ந்திருந்த வண்டியறையில் வேறு நாலுபேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களும் இதைப்பார்த்து ஆச்சரிய மடைந்தார்கள் நள்ளிருளில் நிர்மானுஷ்யமான வயல் நடுவாக தன் தன் தனியே இம்மாதிரியான கோலங்காணு மிடத்து இதை என்னென்று மதிப்பது. நிஜ மனுஷ்யனென்றா? அல்லது புராணங்களிலும் கட்டுக்கதைகளிலும் கூறப்பட்டிருக்கும் தேவதைகளென்றா கூறுவது! இதில் இன்னுமொரு விசேஷம். நாங்கள் பார்த்ததுபோல் அசசமயம் விழித்துக்கொண்டிருந்த பிரயாணிகளுட் சிலரும் பார்த்திருக்கக்கூடும். அரை நிமிஷத்திற்குள்ளாகக் கொழுந்துவிட்டெரிந்த தீயையும் காணோம்; அதன் பக்கத்திருந்த மனுஷரையுங் காணோம்.

——:*:——